கழக வெளியீடு: ௭௯௩

# தமிழ்ப் புலவர் வரிசை

## பகுதி - ௩

[௭ முதல் ௯ புத்தகங்கள்]





ஆசிரியர் :
திரு. சு. அ. இராமசாமிப் புலவர்



திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
திருநெல்வேலி. :: சென்னை-1.

# பதிப்புரை

நாடு, மொழி ஒன்றாலேயே உயர்ச்சிபெறும்; மொழியை வளர்ப்போர் புலவர் பெருமக்கள்; அவர்கள் வரலாற்றை அறிவது, அறிவு வளர்ச்சிக்குத் துணைபுரிவதாகும்.

பெயர் தெரியாது மறைந்துபோய் அவர் பாடிய பாட்டுக்களில் கருத்துச் செறிவுடைய சொற்றொடர்களானும், உறுப்பு முதலிய சிறப்பானும் பிறவற்றானும் பெயர்கொண்டு நிலவும் புலவர் பெருமக்களும் அஃதன்றி மறைந்து பெயரே தெரியாது, அவர் பாடித்தந்த நூல்கள்மட்டில் இருக்கும் புலவர் பெருமக்களும் பலராவர்.

இத்தகைய மாண்புமிக்க கலைச்செல்வர்களின் வரலாற்றை இயன்றவரை தொகுத்து நம் தமிழ்கூறு நல்லுலகுக்கு அளிக்க வேண்டுமென்ற கருத்தை அடிப்படையாகக்கொண்டு முதற்கண் சங்ககாலத்து வாழ்ந்த தமிழ்ப் புலவர்கள் வரலாற்றைச் சங்கத் **தமிழ்ப் புலவர் வரிசை**' என்னும் தொகுப்பில் பதினாறு தனி நூல்களாக வெளியிட்டோம். பின்னர் அவைகளைத் தொகுத்துக் கட்டடஞ்செய்து நூல்நிலையங்கட்கு ஏற்றவாறு அமைத்து **ஆறு பகுதி**களாக வெளியிட்டுள்ளோம்.

பின்னர்ச் சங்க காலத்துக்குப் பின்பு விளங்கியிருந்த புலவர் பெருமக்களின் வரலாற்றைத் தொகுக்க எண்ணித் **தமிழ்ப் புலவர் வரிசை** என்னும் பெயருடன் முயன்று இதுகாறும் **ஒன்று** முதல் **ஒன்பது** நூல்கள்வரை கிடைத்த வரலாற்றைக்கொண்டு **திரு. கு. அ. இராமசாமிப் புலவரவர்**களை எழுதச்செய்து வெளியிட்டுள்ளோம்.

இவ்வரலாறு வெளியிடுதற்குப் புலவர்களும் அறிவுமிக்க மாண்பினரும் தத்தமக்குத் தெரிந்த புலவர்களின் வரலாற்றைத் தாங்கள் அறிந்தவரையில்—கேட்ட அளவில்—தெரிந்து வரைந்

தனுப்பினுல் மேலும் தொடர்ந்து புலவர்கள் வரலாற்றைத் தொகுத்தற்குப் பேருதவியாக இருக்கும். இதனுல் புலவர்கள் வரலாறு ஒருவாறு எங்கும் யாவரும் அறிந்துகொள்ளும் வாய்ப்பும் கிட்டும்.

புலவர் வரலாறுகளை, அவர்கள் ஆக்கிய நூல்களின் துணை கொண்டும், நூலிணைப் புலவர்களைக் கொண்டும் நன்கு அறியலாம். ஆகவே, இந் நன்முயற்சியில் முனைந்து சங்க காலத்துக்குப் பிற்கால முதல் இதுவரை வாழ்ந்திருந்த புலவர்களின் வரலாற்றைத் தொகுத்து முடிப்பதையே முதற்பெருங் கடனுகக் கொண்டுள்ளோம்.

இதுவரை வெளிவந்துள்ள ஒன்பது தனித்தனி நூல்களில் ஒன்று முதல் மூன்று வரையுள்ள மூன்றையும் ஒன்முகத் தொகுத்துக் கட்டடஞ் செய்து, அதை முதற் பகுதியாகவும் நான்கு முதல் ஆறு வரையுள்ள மூன்றையும் கட்டடஞ் செய்து இரண்டாம் பகுதியாகவும் ஏழு முதல் ஒன்பது வரையுள்ள மூன்றையும் கட்டடஞ் செய்து மூன்றும் பகுதியாகவும் தொகுத்துள்ளோம்.

தமிழுலக நன்மக்கள் இவைகளை வாங்கிக் கருவூலங்களில் வைத்துப் போற்றுவதுடன் கற்றும் கற்பித்தும் நாடு மொழி கலைகள் வளரத் துணைபுரிவதோடு எம்மையும் இன்னனபோன்ற அரிய பணிபுரிய ஊக்குவிப்பார்களென நம்புகின்ருேம்.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

# உள்ளுறை

கழக வெளியீடு: ௭௮௨

# தமிழ்ப் புலவர் வரிசை

## ஏழாம் புத்தகம்



ஆசிரியர் :

திரு. சு. அ. இராமசாமிப்புலவர்



திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
திருநெல்வேலி. :: சென்னை 1.

# பதிப்புரை

முன்னேற்றத்தை விரும்பும் நாடுகள் எல்லாம், தத்தம் நாட்டுப் புலவர்கள் செய்தருளிய தாய்மொழி நூல்களை விரும்பிப் படித்தலும் படிப்பித்தலும் செய்கின்றன.

அத்துடன், அப் புலவர்கள் வரலாற்றைச் செம்மையுடன் உணர்ந்து அவர்தம் அறிவு, ஆண்மை, அன்பு, ஒழுக்கம், தந்நலமின்மை, தாய்மொழிப் பற்று, எல்லாருக்கும் உதவுதல், விடா உழைப்பு, அஞ்சாமை, வாய்மை, கடமை முதலிய நற்பண்புகளை மேற்கொண்டு நடத்தி நற்பயன் பெறுகின்றன.

அம் முறையில் நம் நாட்டுப் புலவர்பெருமக்கள் வரலாறுகளையும், அவர்கள் செய்தருளிய நூல்களையும் மாணுக்கர் இளமையிலேயே கற்று அதன்படி ஒழுகுவது, நாட்டுக்கும், மொழிக்கும் செய்யும் நல்தொண்டாகும் எனக்கருதி தமிழ்ப் புலவர் வரிசையில் இதுகாறும் ஆறுநூல்கள் வெளியிட்டுள்ளோம். உங்கள் கையில் மலரும் இந்நூல், இவ்வரிசையில் ஏழாம் புத்தகமாகும்.

இதன்கண் சிவசம்புப்புலவர் முதல் திரு. வி. கலியாண சுந்தர முதலியார் ஈருக உச புலவர் பெருமக்கள் வரலாறுகளும், ஆங்காங்கு அவ்வப் புலவர் பெருமக்கள் யாத்த பாடல்களும், உள்ளுறை நயங்களுடன் செவ்விய இனிய எளிய நடையில் எழுதப்பெற்றிருக்கின்றன.

இதனையும் முதல் ஆறுபுத்தகங்கள் போலவே, ஆசிரியர்களும், மாணுக்கர்களும், பொதுமக்களும் வாங்கிக் கற்றும் கற்பித்தும் புலவர் பெருமக்களுக்குச் செய்யும் கடப்பாட்டினைச் செய்து எங்களையும் ஊக்குவார்களாக.

இதனை எங்கள் வேண்டுகோளின்படி ஆக்கித்தந்த திரு. கு. அ. இராமசாமிப்புலவர் அவர்களுக்கு எங்கள் நன்றி உரித்தாகுக.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

# உள்ளுறை

# தமிழ்ப் புலவர் வரிசை

[ஏழாம் புத்தகம்]



## க. சிவசம்புப்புலவர்

### பிறப்பும் கல்வியும்

சிவசம்புப் புலவர் என்பவர் யாழ்ப்பாணத்தில் உடுப்பிட்டி என்னும் ஊரில் 1852-ஆம் ஆண்டிற் பிறந்தார். சம்பந்தப்புலவர் சரவணமுத்துப் புலவர் என்பவர்களிடத்திலே திருவிளையாடல், கந்தபுராணம், பாரதம், இராமாயணம் முதலிய இலக்கியங்களையும், தொல்காப்பியம், நன்னூல், இலக்கண விளக்கம் முதலிய இலக்கண நூல்களையும் நன்கு கற்றுத் தேறினர். மாணவர் பலர்க்குக் கல்வி கற்பித்தார். யமகம், திரிபு முதலிய செய்யுட்கள் பாடுவதில் மிக வல்லவர்.

### பாடலும் நன்கொடையும்

தமிழ்மொழியிடத்துப் பேரார்வங்கொண்டு விளங்கியவரும், பெருங் கொடையாளருமாகிய பாற்கர சேதுபதி மன்னர்மீது கல்லாடசாரக் கலித்துறை என்னும் நூலும் வேறு பல செய்யுட்களும் பாடிச் சென்று, அரங்கேற்றித் தக்கவாறு பரிசில் வழங்கப்பெற்றார்.

நூல்கள்

கந்தவனநாதர் பதிகம், வல்லிபுரநாதர் பதிகம், செந்தில் யமகவந்தாதி, திருவேரக யமகவந்தாதி, எட்டிகுடிப் பிரபந்தம், புலோலி நான்மணிமாலை முதலிய நூல்கள் இவரால் செய்யப்பெற்றுள்ளன. இவருடைய செய்யுட்கள் மிக நயஞ் செறிந்தவைகளாக விளங்கும்.

"மணியாக வந்தணை வனமுடி மாயன் மருகசுப்ர
மணியாக வந்த மருத்தட வேரக வாசவெங்கண்
மணியாக வந்த குகனே பனிமலை மன்னன் தந்த
மணியாக வந்தரி மைந்தா தந்தாள்பத வாரிசமே"

என்பது இவரால் பாடப்பெற்ற திருவேரக யமகவந்தாதிப் பாடல்களில் ஒன்றாகும்.

இறுதி

இவர் அடிக்கடி தமிழ்நாடு போந்து முருகப்பெருமான் எழுந்தருளிய பல பதிகளையும் வணங்கிச் சென்றார். 1910-ஆம் ஆண்டில் தமது ஊரிலேயே காலமானார்.



## உ. அரசஞ்சண்முகனார்

தோற்றம்

பழந்தமிழ்ப் பதியாகிய மதுரைமாநகருக்கு அண்மையில் உள்ள சோழவந்தான் என்னும் ஊரிலே, 1868-ஆம் ஆண்டு செப்டம்பர்த்திங்கள் 15-ஆம் நாள் அரசஞ் சண்முகனார் பிறந்தார். அரசஞ் சண்முகனாரின் தந்தையார் பெயர் அரசப்பபிள்ளை. தாயார் பெயர் பார்வதியம்மையார். அரசஞ் சண்முகனார்க்கு இடப்பெற்ற பிள்ளைப்பெயர் சண்முகம் என்பது. அந்நாளிலே சென்னையில் சண்முகம் பிள்ளை என்னும் பெயருடைய வேறொரு புலவர் விளங்கி

யிருந்தாராகலின் அவரில் நின்றுந் தம்மைப் பிரித்துக் காட்டுதற்குத் தந்தையார் பெயரின் ஒரு பகுதியையும் தம்முடைய பெயரோடு சேர்த்துத் தம்முடைய பெயரை அரசஞ் சண்முகனார் என நீட்டிக்கொண்டார். இப்பெயரே இன்று வரையிலும் நின்று விளங்குகிறது. சண்முகனாரின் குலம் சைவ வேளாளர் குலம். இத்திருக்குலத்தினர் நெல்லை மாவட்டத்தினின்று இங்கு வந்து குடியேறிப் பெருகியவர் என்ப.

கல்விப்பயிற்சி

சண்முகனாரின் குடும்பம் செல்வநிலையிற் சிறந்து விளங்கியது. ஆகவே, சண்முகனாரின் தந்தையார் தம் மகனுடைய கல்விப் பயிற்சியில் கருத்துச் செலுத்தவில்லை. அகவை ஏழு எட்டு ஆகும் வரையிலும் சண்முகனார் தம் மனம் போனவாறு துள்ளித் திரிந்து துடுக்குகள் செய்து கொண்டு வந்தார். பிறகு அரசப்பபிள்ளை தம்கடமையைக் கழித்தற் பொருட்டுத் தொடக்கப்பள்ளி ஒன்றிலே சேர்த்தார். சண்முகனார்க்கு அப்பள்ளிப் படிப்புப் பிடிக்கவில்லை. ஆகவே, உயிர் மெய்யெழுத்துக்களைக் கற்றுக் கொள்வதற்கு முன்னரே அப்பள்ளிப் படிப்பிற்குப் புள்ளி வைத்து விட்டு வீட்டிலே உட்கார்ந்துகொண்டார். அகவை பன்னிரண்டு ஆகியும் சண்முகனார் படிப்பிலே கருத்துச் செலுத்தவில்லை. சண்முகனாரின் பெற்றோர்களும் சண்முகனார் கல்விப் பயிற்சி பெறுதலை ஒரு பொருளாக மதிக்கவில்லை. செல்வம் இருக்கிறபடியால் மகன் சுகமாக இருப்பான் என்று அவர்கள் எண்ணிக்கொண்டார்கள். மக்களைச் சீருடன் வளர்க்காவிட்டால் அவர்கள் பிற்காலத்தில்

“அள்ளிக் கொடுக்கின்ற செம்பொன்னும் ஆடையும் ஆதரவாக்
கொள்ளிக்கும் பட்ட கடனுக்கும் என்னைக் குறித்த தல்லால்

ஆசிரியத்தொழில்

மதுரைச் சேதுபதி உயர்நிலைப்பள்ளிக்குத் தமிழாசிரியர் ஒருவர் தேவைப்பட்டார். சண்முகனாரின் புகழைக் கேள்வியுற்றிருந்தவர்கள் சண்முகனாரை அழைத்தனர். தமது இருபத்திரண்டாம் ஆண்டில், 1890-இல் சண்முகனார் தமிழாசிரியராக வேலை பார்க்கத் தொடங்கினார். மாணவர் பலர்க்குத் தமிழ்மொழியைப் போதிப்பது சண்முகனார்க்கு மிகுந்த களிப்பை விளைத்தது. செய்யுள்களை நன்கு ஆராய்ந்து பலவகைப்பட்ட பொருள்களை மாணவர்கட்குக் கூறி அவர்களுக்கு மிகுந்த மகிழ்ச்சியையும் தமிழ்ப்பற்றையும் உண்டாக்கினார். பன்னிரண்டு ஆண்டுகள்வரை வேலை பார்த்தார். இக் காலத்தில் எண்ணற்ற நூல்களை ஆராய்ந்து போறிஞரானார். தொல்காப்பியம் திருக்குறள் முதலிய நூல்களுக்குப் புதுமையான பொருள்களைக் கூறிச் சொற்பொழிவுகள் செய்தார். சண்முகனாரின் நுண்பொருள் விளக்கத்தைப் பலர் போற்றினுஞ் சிலர் மறுத்துப் பழைமையையே பாராட்டிச் சண்முகனாரைத் தூற்றுதலும் செய்தனர். சண்முகனாரோ போற்றுதலையும் தூற்றுதலையும் ஒரு பொருட்படுத்தாமல், எதற்கும் அஞ்சாமல் தம் கடமையை விடாப்பிடியாக மேற்கொண்டிருந்தார்.

நோய்

சண்முகனார் தமிழாசிரியராக வேலைபார்த்துக்கொண்டிருக்குங் காலத்தில் வயிற்றினுள் கட்டி ஒன்று புறப்பட்டது. அதனால் சண்முகனாருக்குப் பொறுக்கமுடியாத துன்பம் உண்டாயிற்று. பலவகையான மருந்துகளை உண்டும் நோய்தீரவில்லை. அல்லல் மிகுதிப்பட்டது. வேற்றூர் சென்றேனும் நோயை விலக்க எண்ணினார். பாண்டித்துரைத்தேவரவர்களிடம் நோயின் கொடுமையை நுவன்றார். செந்தமிழைப் போற்றுவதிற் சிர்த்திமிக்கோங்கி

நின்ற தேவர் சண்முகனார்க்கு ஓராண்டளவும் ஒய்வு கொடுத்ததுடன் ஒய்வுக்காலத்திற்கும் ஊதியம் கொடுத்தார். மற்றும் மருத்துவச்செலவிற்கென நூறு வெண்பொற் காசுகளும் வழங்கினர். பாண்டித்துரைத்தேவரின் இச் செயல் சண்முகனார்க்கு மிகுந்த மகிழ்ச்சியை அளித்தது. தேவரின் வள்ளன்மையை வாயாரப் புகழ்ந்து மனமார வாழ்த்தினர்.

நோய்நீக்கம்

புதுக்கோட்டைக்கு அண்மையில் உள்ள ஆலங்குடி என்னும் ஊரில் அந்நாளில் தேர்ச்சிபெற்ற மருத்துவர் ஒருவர் இருந்தார். அவருடைய பெயர் வேணுகோபால் நாயுடு. சண்முகனார் வேணுகோபால் நாயுடுவிடம் நோய் நீக்கத்தின் பொருட்டுச் சென்றார். வேணுகோபால் நாயுடு சண்முகனாரின் நோயின் தன்மையை ஆராய்ந்து பார்த்தார். தமது ஆற்றலுக்கு மேற்பட்ட தென்பதை அறிந்தார். தஞ்சையில் இருந்த தலைமை மருத்துவர், எச். எம். ஹக்கீம் என்பவரிடஞ் சென்று மருத்துவஞ்செய்துகொள்ளுமாறும் தம்மால் நீக்குவது இயலாதென்றும் கூறித் தாமுஞ் சிறிது பொருள் உதவி செய்து சண்முகனாரைத் தஞ்சைக் கனுப்பினர். தஞ்சை மருத்துவர் சண்முகனாருக்கு அறுவை மருத்துவஞ் செய்து நோயைப் போக்கிக் குணப்படுத்தினர். நன்றி மறப்பது நன்றன்றாகலின், சண்முகனார் ஹக்கீம் அவர்களின் பேருதவியை உயிருள்ள வரையில் மறவாது போற்றினர். தாம் எழுதி வெளிப்படுத்திய தொல்காப்பியப் பாயிர விருத்தியை ஹக்கீம் அவர்களின் நினைவுக்குறியாக வெளிப்படுத்தினர்.

தமிழ்ச்சங்கம்

ஈண்டிய புகழ்சேர் பாண்டித்துரையெனும் ஆண்டகையவர்களால், 1901-ஆம் ஆண்டு செப்டம்பர்த் திங்கள்

பதினான்காம்நாள் மதுரையிலே தமிழ்ச்சங்கம் என்னும் பெயருடன் சங்கம் ஒன்று ஏற்படுத்தப் பெற்றது. அச் சங்கத்தின் ஆதரவில் பதிப்பகம், பத்திரிகை, படிப்பகம், செந்தமிழ்க்கல்லூரி ஆகியவைகளும் ஏற்படுத்தப் பெற் றன. பதிப்பகத்தில் இருந்து செந்தமிழ் என்னும் பத்தி ரிகை ஒன்று வெளியிடத் தொடங்கியதோடு நூல்கள் பல பிழையற ஆராய்ந்து பதிப்பிக்கப்பட்டன. செந்தமிழ்க் கல்லூரியில் பிரவேச வகுப்பு, பால பண்டித வகுப்பு, பண் டித வகுப்பு என மூன்று வகுப்புக்கள் புலவர் படிப்புக்காக ஏற்படுத்தப்பட்டன. பாண்டித்துரையவர்களின் வேண்டு கோளின்படி சண்முகனார் செந்தமிழ்க்கல்லூரியில் ஆசிரிய ராக அமர்ந்து பணியாற்றினார். செந்தமிழ்த் திங்கள் தாளில் கட்டுரைகள் பல எழுதி வெளியிட்டார்.

### திருவருள் நிகழ்ச்சி

சனியா உழைப்பினால் சண்முகனார் அடிக்கடி நோய் வாய்ப்பட்டார். ஒரு சமயத்தில் நோய் மிகுதியாக இருந்தது. எழுந்து நடமாடுதற்கும் முடியாதவராய்ப் படுக்கையிலேயே இருந்தார். எழுந்து காலைக்கடன் மாலைக்கடன் முதலியவை கட்குச் செல்லவும் முடியாது. அவ்வாறு செல்லவேண்டு மாயின் உதவிக்கு ஒருவர் கூடஇருந்து கைகொடுத்து அழைத்துச்செல்லவேண்டும். இவ்வாறிருக்கும்போது ஒருநாள் ஒருபெரியவர் சண்முகனார்க்கு முன் தோன்றினார். தம்முடன் எழுந்து வருமாறும் அவ்வாறு வந்தால் நோய் நீக்கத்திற்கு மருந்து கொடுப்பதாகவும் கூறி அழைத்தார். நடக்க முடியாமல் இருந்த சண்முகனார் எவ்வாறோ எழுந்து நடந்து அந்தப் பெரியவரோடு சென்றுவிட்டார். அப் பெரியவர் சண்முகனாரை நாகமலைக்கு அழைத்துச்சென் றார். அங்கிருந்த ஒரு மூலிகையைச் சண்முகனார்க்குக்

காட்டி அதனைப் பறித்து உண்ணுமாறு உரைத்தார். சண்முகனாரும் கீழே குனிந்து மூலிகையைப் பறித்தார். பிறகு, நிமிர்ந்து பெரியவரைப் பார்த்தால் அவர் காணப்படவில்லை. மறைந்து போனார். சண்முகனார் அப் பெரியவர் காட்டிய மூலிகையை உண்டார். உடலில் தென்பு உண்டாயிற்று. நன்றாக நடக்கும் ஆற்றலும் ஏற்பட்டது. நடந்து வீட்டை நோக்கி வந்துகொண்டிருந்தார். இவர் செய்தி இவ்வாறாக, வீட்டில் இருந்தவர்கள் சண்முகனாரைக் காணாமல் நான்கு பக்கங்களினும் தேடத் தொடங்கினர். நோயாகப்படுத்திருந்த சண்முகனார் காணப்பெறவில்லை என்னுஞ் செய்தி எங்கும் பரவியது. தேடத் தொடங்கியவர்களிற் சிலர், காகமலையில் இருந்து நடந்துவரும் சண்முகனாரைக் கண்டார்கள். அவர்கட்கு வியப்பும் திகைப்பும் அதிகமாயிற்று. அவர்கள் நிகழ்ந்ததை உசாவியறிந்து வியப்படைந்தனர். நிகழ்ச்சியை உணர்ந்த அனைவரும் இது தெய்வத் திருவருள் என்று கூறி மகிழ்ச்சி யடைந்தார்கள்.

ஆதீன நன்கொடை

சண்முகனாரின் பரந்த தமிழ்ப்புலமையைத் திருவாவடுதுறை ஆதீனத் தலைவர் அறிந்தார். ஆதீனத்தில் சிறப்பு ஒன்று நிகழ்ந்த சமயத்தில் சண்முகனாரை யழைத்துச் சொற்பொழிவுகள் செய்யச்செய்தார். சண்முகனாரின் அறிவாற்றல் ஆதீனத் தலைவருக்கு மகிழ்ச்சியை அளித்தது. பீதாம்பரப் பட்டொன்றையும் நூறு வெண்பொற் காசுகளையும் ஆதீனத்தலைவர் சண்முகனார்க்கு நன்கொடையாக வழங்கினார்.

ஆதீனத்தில் நன்கொடையைப் பெற்ற சண்முகனார் வேறு சிலருடன் குதிரைவண்டி ஒன்றில்ஏறிப் புகைவண்டிநிலையத்தை நோக்கிச் சென்றுகொண்டிருந்தார்.

வழியிலே ஓர் ஏழைப்பெண் தக்க உடையில்லாமல் அரை குறையாக அரையைமூடிச் சென்றுகொண்டிருத்தலையும் அவள் தன் மானத்தை மறைத்தற்கு அடிக்கடி கிழிசற் புடவையை இழுத்து இழுத்துக் கலக்கமடைதலையுங் கண் டார். அவளுடைய அவலநிலைமை சண்முகனார்க்கு மன நெகிழ்ச்சியை உண்டாக்கியது. "வறியார்க்கொன்றீவதே யீகை" என்று எண்ணினார். தமக்கு ஆதீனத்தலைவர் வழங்கிய பீதாம்பரத்தை அப் பெண்ணிடம் கொடுத்து அணிந்துகொள்ளச் சொல்லியதுடன் சிறிது பணமும் கொடுத்துவிட்டுச் சென்றார். இந் நிகழ்ச்சி அந்த ஏழைப் பெண்ணைத் திக்குமுக்காடச் செய்தது. அவள் செய் வகையறியாது திகைத்துநின்றாள். இந் நிகழ்ச்சி ஆதீ னத் தலைவருக்கு எட்டியது. சண்முகனார் ஆதீனநன் கொடையை இழிவுபடுத்திவிட்டதாக எண்ணி உள்ளம் வருந்தினார். சண்முகனார் தம்மூர்போய்ச் சேர்ந்தவுடன் நண்பர் சிலரால் ஆதீனத்தலைவரின் மனவருத்தத்தை அறிந்தார். மீண்டும் திருவாவடுதுறைக்கு வந்து ஆதீனத் தலைவரைக் கண்டார். தாம் பொன்னுடையை வழங்க நேர்ந்த காரணத்தைச் சொன்னார். ஆதீனத்தலைவர் வேறொரு பொன்னுடையை வழங்கி, "மதிப்புக்கு வழங் கும் நன்கொடைப்பொருளைப் பிறருக்கு வழங்குதல் கூடாது," என்று அறிவுரையும் கூறி அனுப்பினார்.

உயிர்காத்தவர்

தமிழ்க்கடலில் நன்குநீந்தப் பழகிய சண்முகனார் தண்ணீரில் நீந்த அறியார். மதுரையில் உள்ள மாரியம் மன் தெப்பக்குளத்தில் ஒரு நாள் இறங்கிய சண்முகனார் பாசியால் வழுக்குற்றுத் தண்ணீரில் விழுந்து விட்டார். உதவிக்குப் பக்கத்தில் எவரும் இலர். தண்ணீரில் மூழ்கு

வதும் எழுவதுமாகத் தத்தளித்துக் கொண்டிருந்தார். அப்பொழுது சுப்பிரமணிய முதலியார் என்னும் அன்ப ரொருவர் ஓடிச் சண்முகனார்க்குக் கைகொடுத்துத் தூக்கி அவரைக் கரையேற்றினார். அது முதல் அவர்கள் இருவர் களும் நண்பர்களாய் விளங்கினர். இந்த நண்பரின் பொருட்டுப் பாட்டொன்று பாடிச் சண்முகனார் ஒருநாள் மழைபெய்யச் செய்தார்.

மறுப்புகள்

சண்முகனாரின் புத்துரைகள் பலவற்றையுங் கண்ட சிற்றறிஞர்கள் சிலர், சண்முகனாரின் கூற்றுக்களை மறுத் துப் பத்திரிகைகளில் எழுதத்தொடங்கினர். சண்முக னார் அவைகட்கெல்லாம் தக்கவாறு மறுமொழிகூறி அவர்களின் ஆட்டத்தை அடக்கினார். இலங்கைசென்று இரண்டு மூன்று ஆண்டுகள்வரை தங்கித் தமிழ்வளர்ச்சிக் காக அங்குப் பல சொற்பொழிவுகள் செய்தார். இவரு டைய தமிழாற்றலை அறிந்த பலர், இவரிடம் பல நூல்களைப் பாடங்கேட்டு மகிழ்ந்தனர்.

இறுதி

அரசஞ் சண்முகனார் தம் வாழ்நாள் முழுவதும் தமி ழுயர்ச்சிக்கே உழைத்தார். பேரறிவைப் பெற்ற இவர் நிறைவாணாளைப் பெறவில்லை: தமது நாற்பத்தேழாம் ஆண்டில், 1915-ஆம் ஆண்டு சனவரித் திங்கள் 10-ஆம் நாள் தமது புகழுடம்பை உலகில் நிறுத்திப் பூதவுடலை மண்ணில் மறைத்தார்.

சமகாலப் புலவர்கள்

பரிதிமாற் கலைஞர், மயிலை சண்முகம் பிள்ளை, திரு மலை சக்கையா முதலியவர்களும் அண்மையில் மறைந்த. உ. வே. சாமிநாதையர், மறைமலையடிகள், பண்டித மணி

மு. கதிரேசன் செட்டியார், கந்தசாமியார் முதலியோர்களும் இவர் காலத்திய புலவர்களாவர்.

இயற்றிய நூல்கள்

1. மாலைமாற்றுமாலை
2. இன்னிசை இருநூறு
3. மீனாட்சியம்மை சந்தத்திருவடிமாலை
4. திருவடிப்பத்து
5. சிதம்பர விநாயகர்மாலை
6. தொல்காப்பியச் சண்முகவிருத்தி
7, திருக்குறள் சண்முகவிருத்தி
8. திருவள்ளுவர் நேரிசை
9. ஆகுபெயர் அன்மொழித்தொகை ஆராய்ச்சி
10. ஏகபாத நூற்றந்தாதி
11. முருகக்கடவுள் கலம்பகம்
12. இசைநுணுக்கச் சிற்றுரை
13. நண்பொருட்கோவை
14. மதுரைச் சிலேடை
15. நவமணிக் காரிகைநிகண்டு
16. பஞ்சதந்திர வெண்பா

ஆகிய இவைகள் அரசஞ்சண்முகனார் செய்த நூல்களாம். இவைகளில் சில நூல்கள் அச்சாகி வெளிவந்துள்ளன.

---

## ௩. பூவை கலியாணசுந்தர முதலியார்

### பிறப்பு

தொண்டைநாட்டிலே சென்னையம்பதியை ஒட்டியுள்ள பறங்கிமலையிலே 1854-ஆம் ஆண்டு மேத் திங்கள் பத்தாம் நாள் கலியாண சுந்தர முதலியார் தோன்றினர். கலியாணசுந்தரரின் தந்தையார் பெயர் அண்ணுச்சாமி முதலியார். தாயார்பெயர் உண்ணுமுலையம்மை கலியாணசுந்தரர் பின்னளில் சென்னையை ஒட்டியுள்ள பூவிருந்தவல்லிக்குக் குடியேறியமையின் அவருடைய பெயர் பூவை கலியாணசுந்தரர் என மாறி நின்றது. பூவை என்பது பூவிருந்தவல்லி என்பதன் மரூஉப் பெயர்.

### கல்விப்பயிற்சி

கலியாணசுந்தரர் நுண்ணறிவுடையவராக விளங்கியமையின் மிக இளம்பருவத்தில் தானே நிகண்டு, அந்தாதி, கலம்பகம், பிள்ளைத்தமிழ் முதலிய நூல்களைக் கற்றுச் செய்யுள் பாடுந் திறமுடையவராக விளங்கினர். நாள்தோறுந் திருமுருகாற்றுப்படையைக் கூறி முருகக்கடவுளை வழுத்தியபடியால் முருகக்கடவுளின் திருவருளும் கலியாணசுந்தரர்க்குக் கைகூடி நின்றது. பூங்காவனக்கவிராயர் என்பவரிடம் கலியாணசுந்தரர் பாடசாலையில் கல்வி கற்றுக் கொண்டிருந்தார். ஆசிரியர் இல்லாத சமயத்திலே ஒரு நாள் மாணவர்கள் குறும்புசெய்து விளையாடிக்கொண்டிருந்தனர். ஆனல், கலியாணசுந்தரர் மற்றவர்களோடு சேராமல் தம் பாடங்களைக் கருத்துடன் படித்துக்கொண்டிருந்தார். பாடசாலைக்கு வந்த பூங்காவனக்கவிராயர் மாணவர்களின் குறும்பைக்கண்டு சினங்கொண்டார். பிரம்பைக் கையில்எடுத்துக்கொண்டு மாணவர்களின்

என்பவர் இலக்கிய இலக்கணங்களினும் சைவசித்தாந்த நூல்களினும் சிறந்த புலமையுடையவராகத் திகழ்ந்தார். கலியாணசுந்தரர் தம்பிரானிடஞ் சென்று தமக்குக் கல்வி கற்பிக்குமாறு வேண்டிக்கொண்டார். தம்பிரான் சுந்தரரை மாணவராக ஏற்றுக்கொண்டார். சைவசமய நூல்கள் பல வற்றையுங் கற்பித்தார்.

நல்லாரைக் காண்பதுவும் நன்றே

இராமலிங்கத்தம்பிரானிடங் கல்விகற்கத்தொடங் கியது முதல் கலியாணசுந்தரருக்குச் சைவப்பற்றும் பெரி யார் கூட்டுறவில் விருப்பமும் மிகுதிப்பட்டன. காஞ்சி மாநகருக்குச் சென்று சிவதீக்கை பெற்றுக்கொண்டார். அந்நாளில் வடலூரில் இராமலிங்க அடிகள் சிவாநுபூதிச் செல்வராக எழுந்தருளியிருந்தார். கலியாணசுந்தரர் வட லூருக்குச் சென்று இராமலிங்க அடிகளைக் கண்டு வணங் கினர். அடிகளாருடைய திருவருள் நோக்கத்தைப் பெற்றுத் திரும்பினர். திரிசிரபுரம் மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம்பிள்ளையவர்கள் 1873-ஆம் ஆண்டில் சென்னை மாநகருக்குவந்து மயிலாப்பூரில் தங்கினர். மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்களின் பெருமையைக்கேட்டு அவரைப் பார்க்கவேண்டும் என்று விரும்பியிருந்த கலியாணசுந்தரர் மயிலாப்பூரில் பிள்ளையவர்கள் தங்கியிருந்த வீட்டிற்குச் சென்றார். கூட்டம் வீட்டில் கும்மாளமிட்டிருந்தது. கலியாணசுந்தரரால் உள்ளே நுழையக்கூடமுடியவில்லை. நீண்ட நேரம் வெளியே காத்திருந்த கலியாணசுந்தரர்,

"சீர்பெருகுஞ் சிரபுரத்து மீனாட்சி
சுந்தரநற் செம்மலேறே!
ஏர்பெருகு நின்வீட்டு வாயிலினில்
நிற்கின்றேன் எனைய ழைத்துப்

பேர்பெருகுங் கல்விநலம் மேன்மேனும்
என்றனக்குப் பிறங்கி யோங்க
ஆர்பெருகு நின்னுசி யினைக்கூறி
அன்புடனே ஆட்கொள் வாயே.”

என்னும் செய்யுளை எழுதி ஓரன்பரிடம் கொடுத்துப் பிள்ளையவர்களிடம் கொடுக்குமாறு வேண்டிக்கொண்டார். பாட்டைப்பெற்றவர் பிள்ளையவர்களிடம் கொண்டுபோய்க் கொடுத்தார். பாட்டைப்பார்த்த மீனாட்சிசுந்தரம் பிள்ளை மகிழ்ச்சியடைந்து கலியாணசுந்தரரை உள்ளே அழைத்துப் பாராட்டினார்.

“கலியாண சுந்தரவென் கண்மணியே நின்பால்
மலிவாகக் கல்வி வளரும்—பொலிவாகப்
பொற்புவியிற் கற்றோர் புகழச் சிவஞான
விற்பனனாய் வாழ்ந்திருக்க வே.”

என்று ஒரு வாழ்த்துப்பாக் கூறி மகிழ்வித்தார். 1875-ஆம் ஆண்டில் கலியாணசுந்தரர் செங்கற்பட்டையடைந்து செகந்நாதப் பிள்ளை என்னும் புலவரிடம் இலக்கணக் கொத்து, இலக்கண விளக்கம், நன்னூல் விருத்தி முதலிய நூல்களைப் பாடங்கேட்டார். அவரிடம் அவதானம் செய்யவும் பழகிக்கொண்டார்.

அவதானஞ்செய்தல்

அவதானஞ் செய்தலாவது ஒரு பேரவையில் பல புலவர்கள், ஒரே காலத்தில் பலவகைப் பொருள்களை வைத்துப் பலவகைப் பாக்களில் அப்பொழுதே பாடிக் காட்டுமாறு கேட்பார்கள். இன்னும் கல்வி காரணமாக எத்தகைய பொருளைப் பற்றிப் புலவர்கள் கேட்டாலும் அவர்கள் எல்லோருக்கும் பதிலுரைக்கவேண்டும். இந்த அவதானம் அட்டாவதானம், தசாவதானம், சோடசாவதானம், சதாவதானம் என்று எண்ணிக்கையைப்

பொறுத்துப் பெயர்பெறும். கலியாணசுந்தரர் அட்டாவ தானி என்று புகழ் பெறவிரும்பினார். அவதானஞ்செய்ய முடிவு செய்தார். 1878-ஆம் ஆண்டில் திருக்கழுக்குன்றத் தில் தசாவதானி செகந்நாதப் பிள்ளையின் தலைமையிற் பேரவை ஒன்று கூடியது. அங்குப் பெருந்திரளான மக்களும் அறிஞர்களும் கூடினார்கள். புலவர்களில் ஒரு வராகிய சுந்தரமுதலியார் என்பவர், கைக்கும் புத்தகத் திற்கும் ஒரு சிலேடை வெண்பாப் பாடவேண்டுமென்று கேட்டார். உடனே கலியாணசுந்தரர்,

"மூடித் திறத்தலினால் மொய்ரேகை யேயுறலால்
நாடி யெவருமே நண்ணுகையால்—கோடலினால்
வித்தகர்கள் நத்துகிற வேதகிரி தண்பதியில்
அத்தமது புத்தகமு மாம்."

என்று பாடினார். வேறொரு புலவர் எழுந்து, "பால் என்னுஞ்சொல் பத்து இடங்களில் வருமாறு ஒருவெண் பாப் பாடவேண்டுமென்று கேட்டார். அதற்கு,

"பற்றுங் கொடிக்ககனும் பங்கயனுங் காசு
பற்றோ வுரித்தவன்னப் பாலேபால்—மற்றப்பால்
மாட்டுப்பால் பூப்பால் மரப்பால் வனிதையர்பால்
ஆட்டுப்பா லப்பாலிப் பால்."

என்று பாடினார். வேறு பலரும் பலவாறு கலியாண சுந்தரரின் திறமையை ஆராய்ந்தார்கள். பிறகு அப் பேரவையில் கலியாணசுந்தரருக்கு அட்டாவதானம் என் னும் சிறப்புப்பெயர் வழங்கப்பட்டதுடன் பலவகையான சிறப்புக்களும் செய்யப்பட்டன.

திருமணம்

1879-ஆம் ஆண்டில் கலியாணசுந்தரருக்குத் திருமணம் நடைபெற்றது. இரண்டு பெண்மக்களும் ஓர் ஆண்மகனும்

தோன்றினர். திருமணம் ஆன மறு ஆண்டில் கலியாண சுந்தரரின் தந்தையார் விண்ணுலகடைந்தார். குடும்பப் பொறுப்புக் கலியாணசுந்தரரின் தலைமீது விழுந்தது. அலு வல் ஒன்றை மேற்கொண்டு அதனால் வரும் ஊதியத்தைக் கொண்டு குடும்பத்தை நடத்தினார். நாளடைவில் கலியாண சுந்தரர்க்கு மாணவர் கூட்டம் அதிகப்பட்டுக்கொண்டே வந்தது. கலியாணசுந்தரர் சிறிதும் முகங்கோணாமல் அவர் கள் எல்லோருக்கும் அவரவர் விரும்பும் நூல்களைப் பாடஞ்சொல்லி மகிழ்ச்சிப்படுத்தினார்.

ஆசிரியரிடத்தன்பு

கலியாணசுந்தரர் தமக்கு நூல்கள் பலவற்றைக் கற்பித்த செகந்நாதப்பிள்ளையிடம் பேரன்பு காட்டினார். அன்பர்கள் தமக்கு அளித்த பரிசுகளையெல்லாம் செகநாதப் பிள்ளைக்கே வழங்கினார்.

சொற்பொழிவுகள்

சைவசித்தாந்தத்திலே அழுத்தமான பற்றுக்கொண்ட கலியாணசுந்தரர் சமயம் நேரும்போதெல்லாம் சைவ சமயச் சொற்பொழிவுகளைச்செய்து மக்கள் உள்ளத் திலே கடவுளன்பையும் நற்பண்பையும் வளர்த்தார். நடராசசபை என்னும் பெயருடன் சபையொன்று நிறுவிப் பெரியபுராணம், திருவிளையாடற்புராணம், கந்த புராணம் முதலிய நூல்களையெல்லாம் மக்கள் நன்குணர்ந்து கொள்ளுமாறு சொற்பொழிவுசெய்தார். "இறைவன் மக்களுடைய உள்ளத்திலே உறைகின்றான். மக்கள் அனைவரும் தீவினையை நீக்கி நல்வினையையே அணிகலனாகக் கொள்ளுதல் வேண்டும். கூற்றுவன் நமது உயிரைக் கவர்தற்குக் கள்ளன்போலவும், நிழல்போலவும் நம்மைத் தொடர்ந்து நிற்கின்றான். இறைவன் திருவருளில்

ஒவ்வொருவரும் முழுநம்பிக்கை கொள்ளுதல் வேண்டும்,'' என்னும் கொள்கைகளை மக்கள் நன்குணர்ந்து கொள்ளுமாறு போதித்தார். பல பேரவைகளில் அவைத் தலைமை தாங்கிச் சொற்பொழிவுகள் செய்தார். சிவனடியார் திருக்கூட்டம் முதலியவைகளை ஏற்படுத்தித் தொண்டு செய்தார். சித்தாந்தம் முதலிய பத்திரிகைகளில் கட்டுரைகள் வரைந்தார்.

புதுமையான நிகழ்ச்சிகள்

கலியாண சுந்தரர் ஒரு நாள் சென்னைக் கந்தகோட்டத்திற்குச் சென்று திரும்பினார். ஆருயிரினும் அருமையாக மதித்திருந்த அவருடைய திருநீற்றுச்சம்புடம் யாண்டோ தொலைந்து போயிற்று. அச் சம்புடம் காணாமற் போனது அவருக்கு மிகுந்த மனவருத்தத்தை உண்டாக்கியது.

"பூதியினுக் காலயமாம் பொற்சம் புடந்தவறி
வீதியினில் எங்கேயோ வீழ்ந்ததுநற்—சோதிமிகும்
கந்தகோட் டத்தமரும் காங்கேயா அக்கவலை
சிந்தையினில் வாராமற் செய்."

என்று முருகன்மீது ஒரு செய்யுள் பாடினார். இரண்டொரு நாள் சென்றபின் மீண்டுங் கந்தகோட்டத்திற்குச் சென்றார். அப்போது கோயில் வாயிலில் ஒருவன் இவருடைய திருநீற்றுச் சம்புடத்தைக் கையில்வைத்து விலை கூறிக் கொண்டிருந்தான். கலியாணசுந்தரர் அதனைக்கண்டு வியப்புற்றார். அவனிடம் உண்மையைக் கூறிச் சிறிது பொருள் கொடுத்தார். அவன் சம்புடத்தைக் கொடுத்து விட்டான். சம்புடம் மீண்டுந் திரும்பியது கலியாண சுந்தரருக்கு மிகுந்த மகிழ்ச்சியை அளித்தது.

ஒரு நாள் கலியாண சுந்தரர் திருவிற்கோலம் என்னும் ஊருக்குச் சென்றார். கோவிலுக்குச் சென்று இறைவனை

வணங்கி விட்டுப் புறப்பட்டார். வெள்ளிப்பூண் பிடித்த தமது கைத்தடியைக் கோயிலில் வைத்துவிட்டு மறந்து வெளியே வந்து விட்டார். பிறகு சென்று தேடிப்பார்த்தார். தடி அகப்படவில்லை. மனம் வருந்தியது.

"சுந்தரர்க்குக் கோல்கொடுத்த சோதியே! கல்யாண
சுந்தரன்கோல் கொண்டதென்ன சூழ்ச்சியோ—விந்தைமிகும்
விற்கோல மேவந்து வீறுகழ லைப்பணிந்த
நற்கோ பதில்செய்தாய் சாற்று"

என்று பாடினார்.

ஒருசமயம் இவர் புறப்பட்டுச் சென்னைக்கு வந்து கொண்டிருந்தார். வழியில் ஒரு கூட்டம் வந்து கொண்டிருந்தது. கூட்டத்தில் இருந்த ஒருவன் தடியை வைத்துக் கொண்டிருந்தான். தடி தம்முடையதென்று கலியாண சுந்தரர் கூறினார். அவன் மறுமொழி யொன்றுஞ் சொல்லாமல் தடியைத் தந்து விட்டான். அப்போது கலியாண சுந்தரர்,

"கோலையங் கேனெடுத்தாய் கொண்டுவந்திங் கேன்கொடுத்தாய்
வேலையிது தானோ விளம்பிடுக—பாலைநிகர்
சொல்லார்தே விப்புகழுந் தொல்திரிபு ராந்தகனே
எல்லாநின் றன்விளையாட் டே"

என்று பாடினார். பிறகு காணாமற்போன மூக்குக் கண்ணாடி யொன்றும் வியக்கத்தக்கவாறு மீண்டது. 1879-ஆம் ஆண்டில் கலியாண சுந்தரர் செங்கற்பட்டிலிருந்து காட்டு வழியாகத் திருப்போரூர்க்குச் சென்று கொண்டிருந்தார். வழியில் பாம்பொன்று கலியாண சுந்தரரின் காலிற் கடித்து விட்டது. அப்போது முருகன் அங்குத் தோன்றித் திருவருள் புரிந்து கலியாண சுந்தரரைக் காப்பாற்றினான். மயிலம் புகைவண்டி நிலையத்தில் இருந்து மயிலம் கோவிலுக்குச் செல்லும்போது வழியிற் கள்வனிடம் பறி கொடுத்த பொருள்களும் மீண்டன.

**இறுதி**

கலியாணசுந்தரருடைய மக்கள் ஒருவர் பின் ஒருவ ராக இறைவன் திருவடி நீழலை யடைந்தனர். இறுதியில் அவருடைய மனைவியாரும் வீடுபேற்றினை யடைந்தார். கலியாண சுந்தரருடைய உள்ளம் உலக வாழ்க்கையை அடியோடு வெறுத்தது. எல்லாம் பொய்யென்னும் தோற்றத்தை அடைந்தது. அவர் துறவுபூண விரும்பினார். காஞ்சியில் இருந்த ஞானப்பிரகாசசுவாமிகள் என்பவரிடஞ்சென்று துறவறநிலையை மேற்கொண்டு தூய துறவியாக ஒழுகினார். சென்னையில் உள்ள அருணாசலேசுரர் திருக்கோயில் திருவிழாவில் கலியாணசுந்தரர்க்குச் சிறு விபத்தொன்று ஏற்பட்டது. அதன் பயனாக உடல்நலங் கெட்ட கலியாண சுந்தரர் 1918-ஆம் ஆண்டில் மார்கழித் திங்களில் விசாகநாளில் சிவபரம்பொருளின் திருவடி நீழலை அடைந்தார். அவருடைய உடல் திருவொற்றியூரிலே அடக்கஞ் செய்யப்பட்டது.

**இயற்றிய நூல்கள்**

1. திருப்பாசூர்ப் புராணவசனம்
2. திருவலிதாய புராணவசனம்
3. திருவேற்காட்டுப் புராணவசனம்
4. சேக்கிழார் வரலாறு
5. திருவொற்றியூர்ப் புராணவசனம்
6. காளத்திப் புராணவசனம்
7. சித்தாந்த சாதனக்கட்டளை
8. சித்தாந்த தசகாரியக் கட்டளை
9. திருவான்மியூர்ப் புராணம்
10. மாசிலாமணியீசர் பதிகம்
11. கற்பகவிநாயகர் பதிகம்
12. காமாட்சியம்மன் பதிகம்

முதலிய நூல்கள் கலியாணசுந்தரரால் செய்யப்பெற்றன.

## ௯. செல்வக்கேசவராய முதலியார்

### தோற்றம்

சென்னைமா நகர்க்கு அண்மையில் உள்ள திருமணம் என்னும் ஊரிலே செல்வக்கேசவராய முதலியார் 1864-ஆம் ஆண்டில் பிறந்தார். தந்தையார்பெயர் கேசவசுப்ப ராய முதலியார். தாயார்பெயர் பாக்கியம் அம்மையார். முதலியார் தோன்றிய குடி வேளாண்குடி.

### கல்வி

செல்வக்கேசவர் கல்விகற்கத் தக்க பருவத்தை அடைந்தார். செல்வக்கேசவரின் தந்தையாராகிய கேசவ சுப்பராயர் நல்ல தமிழ்ப்புலவர். கேசவசுப்பராயர் தம் மைந்தனைப் பள்ளிக்கனுப்பியதோடு தாமும் வீட்டில் கல்வி கற்பித்துவந்தார். செல்வக்கேசவரின் கல்லூரிப் படிப்புப் பச்சையப்பன்கல்லூரியில் தொடங்கியது. மெட்ரி குலேஷன் தேர்வில் தேறினார். ஆங்கில நூல்களையும் இடைவிடாது தாமே கற்றார். இதனால் அவருடைய அறிவு விரிந்து பரந்தது. தமிழ் ஆங்கிலம் முதலிய பாடங்கள் எல்லாவற்றினுஞ் செல்வக்கேசவரே முதன்மையாக நின்று பி. ஏ. என்னும் பட்டத்தையும் பெற்றார். ஆங்கில நூல்களையும் தமிழ் நூல்களையும் நன்கு ஆராய்ச்சி செய்து இரண்டிற்கும் இடையே உள்ள ஏற்றத் தாழ்வுகளையும் நன்குணர்ந்து கொண்டார். செல்வக்கேசவரின் உள்ளம் தமிழ்மொழியையே பெரிதும் பற்றியது. தமிழ்ப்புலமை யைக்கொண்டே எம். ஏ. தேர்வுக்குச் சென்றார். தமிழில் எம். ஏ. பட்டத்தை முதன் முதலாகப் பெற்றார்.

### மணமும் மக்கட்பேறும்

செல்வக்கேசவர் இல்வாழ்க்கை இனிது நடத்தற் பொருட்டு வேதவல்லி என்னும் பெயரினையுடைய விளங் கிழையைத் திருமணம் புரிந்தார். மணத்தின்பேறு மக்கட்

பேறன்றோ? செல்வக்கேசவருக்குச் செல்வப் புதல்வர்கள் மூவர் தோன்றினார்கள். செல்வக்கேசவர் தாம் செந்தமிழிடத்தே கொண்டுள்ள தணியாக் காதலை உலகிற்குப் புலப்படுத்த வெண்ணித் தம் மக்கட்குப் "பரிமேலழகர், நச்சினார்க்கினியர், சேனாவரையர்" என்று பெயர்களை இட்டார். பரிமேலழகர் திருக்குறளுக்கு உரையெழுதியவர், நச்சினார்க்கினியர் தொல்காப்பியம் முதலிய பல நூல்கட்கு உரையெழுதியவர். சேனாவரையர் தொல்காப்பியச் சொல்லதிகாரத்திற்கு உரை யெழுதியவர். இவ்வாறு உரையாசிரியர்களின் பெயர்களைத் தம் மக்கட்குச் செல்வக்கேசவர் இட்டதைக் கண்ட பலரும் செல்வக்கேசவரின் தமிழ்ப் பற்றைப் பெரிதும் போற்றிக் கொண்டாடினார்கள்.

ஆசிரியத்தொழில்

செல்வக்கேசவர் தாம் பிறந்த திருமணத்தை விட்டுச் சென்னை பிரம்பூரிலே குடியேறினார். பி. ஏ., எம். ஏ. முதலிய பட்டங்களைப் பெற்ற செல்வக்கேசவர் வாழ்க்கையை இனிது நடத்தற்பொருட்டு ஓர் அலுவல் துறையில் புகவேண்டியவரானார். செல்வக்கேசவர் அரசாங்க அலுவலைப் பெறுதலே அவர்தம் கல்விமாட்சிக்குச் சிறப்பாகும் எனப் பலரும் வற்புறுத்தினர். ஆனால், செல்வக்கேசவரின் உள்ளம் பெருமையையும் புகழையும் நாடவில்லை. தமிழ்த்தாய்க்குத் தக்க தொண்டு செய்யவேண்டும் என்றே அவருடைய உள்ளம் விரும்பியது. பிறருக்குப் போதித்தல் தம் அறிவு வளர்தற்குச் சிறந்த வழியாகும். இதனை நன்குணர்ந்த செல்வக்கேசவர் ஆசிரியத்தொழிலை நாடினார். பச்சையப்பன் கல்லூரியில் பேராசிரியர் பதவி எளிதிற் கிடைத்தது.

அக்காலத்தில் ஆங்கிலமொழியின் ஆட்சியால் தமிழ்மொழி வீழ்ச்சியடைந்திருந்தது. தமிழாசிரியர்கள் நன்கு

மதிக்கப்பெறுவதில்லை. பேராசிரியருக்குத் திங்கள் ஊதியமே அறுபது வெண்பொற்காசுகள் தான். ஆங்கிலத்தில் பி. ஏ., எம். ஏ. முதலிய பட்டங்களைப்பெற்ற செல்வக்கேசவர் ஊதியக் குறைவை ஒரு பொருளாகவே மதிக்கவில்லை. தமிழ்த்தொண்டு புரிதலையே தங் கடமையாகக் கொண்டார். செல்வக்கேசவர் செய்த செந்தமிழ்த் தொண்டு சிறந்ததாக இருந்தது. இதனைக் கல்லூரித் தலைவர் முதலியோர் எண்ணி மதித்தனர். திங்களூதியம் இருநூற்றைம்பது வெண்பொற்காசுகளாக ஏற்றம்பெற்றது. செல்வக்கேசவர் தமிழ்வளர்ச்சியையே பெரிதும் குறிக்கோளாகக்கொண்டு மாணவர்கட்குக் கல்வி போதித்தார். செல்வக்கேசவர் இனிமை ததும்பப் புரியும் விரிவுரை மாணவர்களின் உள்ளங்களைக் கவர்ந்தது. குறும்பியற்றும் மாணவர்களும் செல்வக்கேசவரின் போதனைத் திறனால் ஒழுங்கு நெறியில் நின்றனர். பன்மொழித் திறனையுஞ் செல்வக்கேசவர் தம் வகுப்பில் போதித்தனர். ஒரு மொழி இரண்டு மொழிகளல்லாமல் ஒவ்வொருவரும் பலமொழிகளைக் கற்றுப் பன்மொழிப்புலவர்களாக இலகவேண்டுமென்று மாணவர்கட்கு அறிவுச்சுடர் கொளுத்தினர். உயர்திரு. தெ. பொ. மீனாட்சிசுந்தரம்பிள்ளை எம். ஏ., பி. எல், உயர்திரு. ரா. பி. சேதுப்பிள்ளை பி. ஏ., பி. எல், முதலியோர் செல்வக்கேசவரிடங் கல்விகற்றவர்களிற் சிலராவர். இப்பெரியார்கள் இன்று உயரிய நன்னிலையிற் பெரும்புகழுடன் விளங்குதலைக் காண்கிறோம் அல்லமோ? செல்வக்கேசவர் சொற்பொழிவாற்றுதலினும் வல்லவர். அவருடைய சொற்பொழிவு திட்பநுட்பஞ் செறிந்தும், நகைச்சுவையோடும் விளங்கும். "சளசள" வென்று நீண்டநேரம் பேசும் வழக்கம் அவரிடம் இல்லை.

நூல்கள் எழுதுதல்

செல்வக்கேசவருடைய காலத்திலே இப்பொழுது இருப்பதைப் போல் எண்ணற்ற உரைநடை நூல்கள் இல்லை. சில உரைநடை நூல்களே இருந்தன. அந் நூல்களின் நடைகளும் முன்னேற்றம் அற்றவைகளாக இருந்தன. காலந்தோறும் உரைநடை வளர்ச்சிபெற்றுவந்துதான் இன்றையநிலையை அடைந்துள்ளது. செல்வக்கேசவர் உரைநடை வளர்ச்சிக்குத் தம்மால் இயன்ற தொண்டுபுரிய வேண்டும் என்று எண்ணினார். புலவர்களாய் அந்நாளில் விளங்கியவர்கள் சரமாரியாகச் செய்யுள்மழை பொழிந்தார்களே யல்லாமல் உரைநடைமாரி பெய்யவில்லை. பெய்யும் ஆற்றலையும் அவர்கள் பெற்றிருக்கவில்லை. முதலில் செல்வக்கேசவர், "அக்பர்" என்னும் உரைநடை நூல் ஒன்றை எழுதினார். அந் நூல் அறிஞர் பலருடைய பாராட்டுதலையும் பெற்றது. பின்னர், கம்பநாடர், தமிழ், தமிழ்வியாசங்கள், வியாசமஞ்சரி, கண்ணகிகதை, அபிநவ கதைகள், கலிங்கத்துப்பரணிஉரைநடை, திருவள்ளுவர், ராபின்சன்குரூசோ, மகாகோவிந்தரானடே முதலியவை களை எழுதினார். இந் நூல்கள் ஒவ்வொன்றிலும் செல்வக் கேசவராயருடைய பெரும் புலமைத்திறனை இனிது காணலாம்.

ஆராய்ச்சி

செல்வக்கேசவர் செந்தமிழ் ஆராய்ச்சியிலே பேரூக்கம் காட்டினார். சங்கநூல்களை எழுத்தெண்ணிக் கற்றார். தமிழ் நூல்களில் வடசொற்கள் எத்தனை விரவி யுள்ளன என்று கணக்கெடுத்தார். திருக்குறளில் அதிகாரத்திற்கு ஒன்று அல்லது இரண்டு வடசொற்கள் கலந்துள்ளன என்றார். கல்லாடத்தில் பாட்டுக்கு ஐந்து வீதமும், நாலடியாரில் ஐந்து பாடல்களுக்கு ஒரு சொல்

வீதமும் கலந்துள்ளன என்றார். மற்றும் பல நூல்களில் இவ்வாறே கணக்கெடுத்துக் காட்டினார். தமிழ்நூல்கள் எல்லாவற்றையும் நன்கு ஆராய்ந்த செல்வக்கேசவர் தமிழ்மொழியின் முதன்மையையும் பெருமையையும் உலகிற்கு நன்கு எடுத்துக்காட்டினார். ஆசாரக்கோவை, பழமொழி, அறநெறிச்சாரம், முதுமொழிக்காஞ்சி, அரிச்சந்திரபுராணம், குசேலோபாக்கியாநம் முதலிய நூல்களைத் தாமே நன்குஆராய்ந்து அச்சிற்பதிப்பித்து வெளியிட்டார்.

இறுதி

தமிழ்வளர்ச்சியையே தலைசிறந்த பெரும் பணியாகக் கொண்ட செல்வக்கேசவர் இவ்வுலகில் பன்னெடுங்காலம் வாழவில்லை. 1864-ஆம் ஆண்டிற் பிறந்த இவர் 1921-ஆம் ஆண்டு அக்டோபர்த்திங்கள் இரண்டாம்நாள் தமது ஐம்பத்தேழாவது அகவையிலே இவ்வுலகைவிட்டு மறைந்தார். கேசவராயரின் மறைவு அவருடைய மாணவர்களின் உள்ளத்தைப் பெரிதும் கலக்கியது. பொது மக்களும் வருந்தினர். செல்வக்கேசவரின் பூதவுடல் மறையினும் அவருடைய புகழுடல் நிலைபெற்று விளங்குகின்றது.

# ரு. தி. த. கனகசுந்தரம்பிள்ளை

*பிறப்பு*

தி. த. கனகசுந்தரம் பிள்ளை இலங்கை திருக்கோண மலையிலே 1863-ஆம் ஆண்டு ஆவணித்திங்கள் 24-ஆம் நாள் பிறந்தார். தந்தையார்பெயர் தம்பிமுத்துப்பிள்ளை. குலம் வேளாண்குலம்.

*கல்வி*

உரிய பருவத்தில் கனகசுந்தரனார் பள்ளிக்கு அனுப் பப் பெற்றார். கனகசுந்தரனார்க்குக் கல்வியறிவு மிகவிரை வாக வளர்ந்தோங்கியது. ஆசிரியர்களாக அமைந்த கதிரை வேற்பிள்ளை என்பவரும், கணேசபண்டிதர் என்பவரும் போதனையாற்றல் மிக்காராய் விளங்கினர். அவர்களிடம் இலக்கிய இலக்கணங்களை குன்றா ஊக்கத்துடன் கனகசுந் தரனார் கற்று, மிகச் சிறு அகவையிலேயே மறைசையந் தாதி முதலிய நூல்களுக்குப் பொருள் உரைக்கத் தக்க ஆற் றலைப் பெற்றுவிட்டார். பதினான்காவது அகவையில் இளந் தமிழ்ப்புலவர் என்னும் பெயர் திருக்கோணமலையிலேயே கனகசுந்தரனார்க்கு உண்டாகி விட்டது.

*ஆங்கிலம்*

அகவை பதினேழு நிரம்பும் வரையில் தாம் பிறந்த இலங்கைநாட்டிலேயே தமிழையும் ஆங்கிலத்தையும் நன்கு கற்ற கனகசுந்தரனார், தமது பதினெட்டாம் அகவையில் 1880-ஆம் ஆண்டில் சென்னையை அடைந்து கல்விகற்க விரும்பினார். ஒரு வீட்டை வாடகைக்கு அமர்த்திக்கொண்டு அதில் தனிமையாகத் தங்கினார். செங்கல்வராயநாயகர் பாடசாலை, பச்சையப்பன்கல்லூரி, மாகாணக்கல்லூரி ஆகியவைகளிற் சேர்ந்து கல்வி கற்றார். தேர்வுகள் யாவற்

றினும் இவரே முதல்வராக நின்றார். பி. ஏ. தேர்விலும் முதன்மையாக விளங்கினார். இவ்வாறு தேர்வுகள் யாவற்றினுங் கனகசுந்தரனாரே முதன்மைபெற்றமையின் இவருடைய மதிப்பு உயர்ந்து விளங்கியது.

அலுவல் பார்த்தல்

கனகசுந்தரனார் பி. ஏ. பட்டம் பெற்றபின் சிறிது காலம் வேலையில்லாமற் பொழுது போக்கினார். பிறகு சிற்றார் என்னும் ஓர் ஊரில் ஒரு பாடசாலையில் சிறிது காலம் தலைமையாசிரியராகப் பணியாற்றினார். பிறகு சென்னை சைதாப்பேட்டை ஆசிரியப்பயிற்சிக்கல்லூரியில் ஆங்கில ஆசிரியராகச்சிறிது காலம் இருந்தார். பின்னர் நுங்கம் பாக்கத்தில் கல்விப்பிரிவு அலுவலகத்தில் கணக்காளர் வேலையில் அமர்ந்தார். இந்த வேலையுங் கனகசுந்தரனார்க்கு மனநிறைவை அளிக்கவில்லை. சிறிது காலம் இந்த வேலையைப் பார்த்தார். பின்னர் அரசியலார் செயலகத்தில்[1] ஒரு வேலையைப் பெற்றார். முன் பார்த்த பல வேலைகளை விட இவ்வேலை கனகசுந்தரனாரின் உள்ளத்திற்கு மிகவும் பிடித்திருந்தது. இந்த வேலையை ஆர்வத்துடன் திறம் பெறச்செய்து மேலதிகாரிகளின் நன்மதிப்பையும் பெற்றார். பிறகு அங்கு வேலையில் உயர்வுபெற்றுச் சிறப்படைந்தார். இறுதிவரை அவ்வலுவலை நன்குபார்த்து முடிவில் உதவி ஊதியமும் பெற்றார்.

மணமும் மக்கட் பேறும்

கனகசுந்தரனார்க்கு முப்பத்திரண்டாம் ஆண்டில் திருமணம் இனிது நிகழ்ந்தது. வாழ்க்கைத்துணைவியாக வாய்த்த மாதரசியின் பெயர் சுந்தரத்தம்மையார். இல்லற வாழ்வை இனிது நடத்தி நின்ற இவர்கட்கு இராசராசன்,

1. Secretariat.

இராசசேகரன், இராசேசுவரன், இராசமார்த்தாண்டன், என்னும் நான்கு ஆண்மக்களும் செல்வநாயகி என்னும் பெண்மகள் ஒருத்தியும் மக்கட்செல்வமாக மாநிலத்தில் தோன்றினர். மக்கட்பேற்றினை இவ்வாறடைந்த கனக சுந்தரனார் பெருமகிழ்ச்சி யடைந்து மக்களைத் தக்கவாறு வளர்த்தார்.

### இளவல்

கனகசுந்தரம்பிள்ளைக்குச் சரவணமுத்துப்பிள்ளை என்னும் பெயருடைய இளவல் ஒருவர் இருந்தார். அவருங் கல்வியறிவிற் சிறந்து பி. ஏ. பட்டம் பெற்றுச் சிறந்த நிலையை அடைந்து திகழ்ந்தார். தத்தை விடுதூது, மோக னாங்கி என்னும் நூல்களை எழுதிய இவர் தமையன் மாட் டுப் பேரன்புடையவராய்த் திகழ்ந்தார். தமையனார் கல்வி யறிவுப் பெருமையைச் சென்ற விடமெல்லாம் புகழ்ந் துரைத்துத் தமையனாரைப் பெருமைக்குள்ளாக்கினார்.

### இன்பத்தில் வறுமை

இன்ப துன்பங்கள் இரண்டும் ஒன்றையொன்று பின்னி நிற்கின்றன என்பது ஆன்றோர் கொள்கை. இன்பக் கடலில் திளைத்து நின்ற கனகசுந்தரனார் துன்பக்கடலில் வீழ்ந்து சுழல வேண்டிய நிலைமை யேற்பட்டது. கனகசுந் தரனாரின் ஆருயிர் அனைய இளவல் சரவணமுத்துப்பிள்ளை இளமைக்காலத்திலேயே இறைவன் திருவடிநீழலை யெய்தினார். இதனால் பெருந்துன்புற்றுக் கலங்கினார் இவர். ஆண்டுகள் சில முடிவதன் முன்னரே வாழ்க்கைத் துணைவி யாராகிய சுந்தரத்தம்மையாருங் கணவனையும் மக்களையுங் கலங்கவிட்டு விண்புகுந்தனர். இதனாலுங் கனகசுந்தர னார் பெருந்துன்புற்றுக் கலங்கினார். ஆயினும் அவர் மறு

மணஞ் செய்துகொள்ளவில்லை. மக்களை வளர்க்கும் பொறுப்பை மேற்கொண்டு காலந்தள்ளினார்.

கல்வியும் தொழிலும்

துன்பத்தை மறப்பதற்குக் கனகசுந்தரனார் கல்வியைத் தோழமைகொண்டார். அறிஞர் சிலரை உடனிருத்திக் கொண்டு தமிழ் நூல்களையும் இலக்கணத்தையும் மேலும் நன்றாக ஆராய்ந்தார். கனகசுந்தரனாரின் பெரும் புலமைத்திறத்தை உணர்ந்த கிறித்துவக்கல்லூரியின் தலைமையாசிரியர் அக்கல்லூரியில் தமிழ்ப்பேராசிரியராக அமர்ந்து பணிபுரியுமாறு கனகசுந்தரனாரைக் கேட்டுக் கொண்டார். தமிழ்வளர்த்துத் தொண்டுபுரிதற்கு இது தக்கவழி என்றுணர்ந்த கனகசுந்தரனார் அப்பணியை மகிழ்ச்சியுடன் ஒப்புக்கொண்டார். தமிழாசிரியத்தொழில் கனகசுந்தரனார்க்கு மிகுந்த மகிழ்ச்சியை அளித்தது. மாணவர் மனமகிழ்ந்து உளங்கொளுமாறு கல்விச்செல்வத்தை வரையாது வாரிவாரி வழங்கினார். கனகசுந்தரனாரிடம் கற்ற மாணவர்கள் நல்ல தமிழ்ப்பயிற்சியுடையவர்களாயினர். கனகசுந்தரனாரின் தமிழ்த்திறத்தை உணர்ந்த பலர், இவரிடம் கல்விகற்கவேண்டும் என்று விரும்பினர். கல்விகற்கவேண்டும் என்னும் விருப்பத்துடன் தம்மிடம் வருவார்க்கெல்லாம் கனகசுந்தரனார் அவரவர் தகுதியை அறிந்து சங்கநூல்களையும், இலக்கண இலக்கியங்களையும் இனிது போதித்து அவர்களையெல்லாம் தமிழறிஞர்களாக்கினார். கனகசுந்தரனாரின் இல்லம் எப்பொழுதுந் தமிழ் கற்பவர் கூட்டத்தால் நிறைந்திருந்ததோடு அங்குச் செந்தமிழ் முழக்கம் எப்பொழுதும் முழங்கிக்கொண்டிருந்தது. சோமசுந்தர முதலியார், மணி திருநாவுக்கரசு முதலியார், மோசூர் கந்தசாமி முதலியார் பி. ஏ. வித்துவான் சுப்பிர

மணிய ஆச்சாரியார் முதலியோர் கனகசுந்தரனாரிடம் தமிழ் கற்ற மாணவர்களிற் சிலராவர்.

தமிழ் நூற்பணி

கனகசுந்தரனார் காலத்திலே நூல்களை அச்சிட்ட அறிஞர்களிற் பெரும்பாலார் தாம் அச்சிடும் நூல்களைக் கனகசுந்தரனாரிடம் காண்பித்து ஆராயச்செய்து அவருடைய உடன்பாட்டோடு வெளியிட்டனர். பலநூல்கள், "இந்நூல், திரு த. கனகசுந்தரம் பிள்ளையவர்களால் பார்வையிடப்பட்டது" என்னும் குறிப்புடன் வெளியாயின. ஆறுமுகநாவலர் அவர்கள் நூல்கள் பதிப்பிக்கும் போது பிழைதிருத்தஞ் செய்துகொடுத்துப் பேருதவி புரிந்தனர். கம்பராமாயணம் பால காண்டத்திற்கு உரை யொன்றும் எழுதி முடித்தார். வடமொழி தென்மொழிகளில் வல்லவராகிய சுன்னாகம் குமாரசாமிப்பிள்ளை அவர்களோடு ஒன்றுபட்டு நம்பியகப் பொருளுக்குப் புத்துரை ஒன்றும் எழுதினார். தமிழ் நாவலர்சரிதை, ஈழமண்டலத் தேவாரம் முதலியன கனகசுந்தரனாரின் குறிப்புரையோடு வெளியாயின. இவர் வடமொழியினும் புலமைபெற்றிருந்தபடியால் வால்மீகி இராமாயணத்தில் சுந்தரகாண்டத்தைத் தமிழில் மொழிபெயர்த்தார். அந்நூல் 1911-ஆம் ஆண்டில் கலியாணராமஐயர் என்பவரால் வெளியிடப் பெற்றது.

இறுதி

ஈழநாட்டில் பிறந்து இந் நாட்டில் கல்வி கற்றுப் பெரும்புலவராக விளங்கித் தமிழ்த்தொண்டு செய்த இவருக்கு இறுதிக்காலம் இவ்விடத்திலேயே உண்டாகியது. அறுபதாம் அகவையில் கனகசுந்தரனாரின் உடல், நோய் வாய்ப்பட்டுத் தளர்ச்சியடையத் தொடங்கியது. இவருக்கு

நோய் கண்டதும் மக்களும் மாணவர்களும் இவரைச் சூழ்ந்தனர். எவ்வாறேனும் பிணியைப் போக்கி மேலும் சில ஆண்டுகள் இம் மண்ணுலகிலே வாழச் செய்யவேண்டும் என்று எண்ணித் தக்க மருத்துவர்களைக் கொண்டு மருந்தளிக்கச் செய்தனர். விண்ணாட்டிற்கு விருந்தாளியாக நிற்கும் இவரை மண்ணாட்டு மருத்துவர் மருந்து யாது செய்ய முடியும்? தன்பால் பேரன்பு கொண்டோர் அனைவரும் வருந்தி ஓலமிடக் கனகசுந்தரனார் 1922-ஆம் ஆண்டு ஆனித் திங்களில் பருவுடல் நீத்துப் புகழுடலைப் பெற்றார்.

## கா. குமாரசாமிப்புலவர்

*தோற்றம்*

அ. குமாரசாமிப் புலவர், 1855-ஆம் ஆண்டு தைத் திங்கள் பதினெட்டாம் நாள், யாழ்ப்பாணம் சுன்னாகத்தில் அம்பலவாண பிள்ளை என்பவருக்கும் சிதம்பர அம்மையார் என்பவருக்கும் அருந்தவச் செல்வனாகத் தோன்றினார். புலவரின் குலம் சைவவேளாண் குலம். புலவரின் தந்தையாராகிய அம்பலவாணபிள்ளை சிவவழிபாட்டிலும் சைவத் திருமுறைகளை யோதுதலிலும் மிகுந்த பற்றுடையவர்.

**கல்வி**

குமாரசாமிப்புலவர் முதலில் மல்லாகம் ஆங்கில பாடசாலையில் கல்வி பயின்றார். பிறகு முருகேசபண்டிதர் என்பவரிடம் இலக்கண இலக்கியங்களைக் கற்றார். நாகநாத பண்டிதர் என்பவரிடம் வடமொழியைக் கற்றார். இலக்கிய இலக்கணங்களைத் தாமே ஆழ்ந்து கற்றார். செய்யுள் பாடுவதினும், கட்டுரைகள் எழுதுவதினும், சொற்பொழிவுகள் செய்வதினும் வல்லுநரானார்.

ஆசிரியத்தொழில்

குமாரசாமிப்புலவரின் கல்வித்திறமையை சி. வை. தாமோதரம்பிள்ளை நன்குணர்ந்தார். அப்பொழுது ஏழாலையில் அவர் தொடங்கிய சைவவித்தியாசாலைக்குத் தலைமையாசிரியராகக் குமாரசாமிப் புலவரை அமர்த்தினார். குமாரசாமிப்புலவர் பல ஆண்டுகள் அவ் வேலையைத் திறமையுடன் பார்த்தார்.

திருமணம்

1892-ஆம் ஆண்டு குமாரசாமிப்புலவருக்குத் திருமணம் நடைபெற்றது. ஒரு பெண்ணும் இரண்டு ஆண்களும் மக்கட்பேறாகத் தோன்றினர். பெண்ணின்பெயர் விசாலாட்சி. ஆண்களின்பெயர் அம்பலவாணன், முத்துக் குமாரன் என்பன.

இந்தியாவுக்கு வருதல்

புலவர் இரண்டு மூன்று தடவை இந்தியாவுக்கு வந்து சிவப்பதிகளை வணங்கிச் சென்றார். ஒருமுறை திருவாவடுதுறை சென்று அவ்வாதீனத்தாராலும் பாராட்டப்பெற்றார். பாண்டித்துரைத்தேவர் முதலிய தமிழ்வாணர்களும் புலவரைப் புகழ்ந்து போற்றினர்.

ஏழாலை வித்தியாசாலையை விட்டபின், கு. கதிரைவேற்பிள்ளை என்பவர் தொகுத்த அகராதிக்குத் துணையாக இருந்து உதவிபுரிந்தார். பிறகு 1902-ஆம் ஆண்டு முதல் ஆறுமுகநாவலருடைய சைவப்பிரகாச வித்தியாசாலைக்குத் தலைமையாசிரியராக அமர்ந்திருந்து இறுதிவரை அப் பணியை நடத்தினார். பாண்டித்துரைத்தேவர் தாம் அமைத்த மதுரைத்தமிழ்ச்சங்கத்தில் புலவரையும் ஓர் உறுப்பினராக அமைத்துத் தமிழ்ச்சங்க அலுவல்களிலும் புலவரை ஈடுபடுத்தினார்.

இறுதி

வாணாள் முழுவதையும் தமிழுக்குப் பயன்படுத்திய புலவர் 1922-ஆம் ஆண்டு சித்திரைத் திங்கள் 25-ஆம் நாள் தமது அறுபத்தேழாம் அகவையிலே மண்ணுலக வாழ்வை நீத்து விண்ணுலக வாழ்வை அடைந்தார்.

இயற்றிய நூல்கள்

குமாரசாமிப்புலவரால் இயற்றப்பெற்ற நூல்கள் யாவும், தமிழ்க்கல்வியைப் பயில்வார்க்குத் துணையாக இருக்கும்வண்ணம் எழுதப்பெற்றவைகளாகும். புலவ ரால் இயற்றப்பெற்ற நூல்கள் :

1. கம்பராமாயணம் பாலகாண்ட அரும்பதவுரை
2. நீதிநெறிவிளக்கப் புத்துரை
3. தண்டியலங்காரப் புத்துரை
4. யாப்பருங்கலக்காரிகைப் புத்துரை
5, வினைப் பகுபதவிளக்கம்
6. சாணக்கிய நீதிவெண்பா
7. இலக்கியச்சொல்லகராதி
8. தமிழ்ப் புலவர் சரித்திரம்
9. இதோபதேசம்
10. சிசுபாலசரிதம்
11. இராமோதந்தம்
12. இரகுவமிச சரிதாமிர்தம்
13. சிவத்தோத்திரக் கவித்திரட்டு
14. மேகதூதக்காரிகை
15. ஏகவிருத்த பாரதாதி
16. மாவைப் பதிகம்
17. கலைசைச் சிலேடைவெண்பா அரும்பதவுரை
18. இலக்கணசந்திரிகை.

என்பனவும் வேறு சில சிறிய செய்யுள் நூல்களுமாம்.

## ஏ. மணி. திருநாவுக்கரசு முதலியார்

### தோற்றம்

செங்கற்பட்டு மாவட்டத்திலே மணிமங்கலம் என்னும் ஊரிலே 1888-ஆம் ஆண்டிலே மணி திருநாவுக்கரசு முதலியார் தோன்றினார். முதலியாருடைய தந்தையார் பெயர் சுந்தர முதலியார். தாயார்பெயர் வேதவல்லி அம்மாள். குலம் சைவவேளாண் குலம். திருநாவுக்கரசுக்கு முன் நான்கு பெண்மக்கள் தோன்றினர். பின் ஒரு பெண்ணும் இரண்டு ஆண்மக்களும் தோன்றினர். ஆண்மக்களின் பெயர் திருஞானசம்பந்தன் கோடீஸ்வரன் என்பனவாம்.

### கல்வி

திருநாவுக்கரசின் தந்தையார் சுந்தரமுதலியார் தெருப்பாடசாலை வைத்திருந்தார். திருநாவுக்கரசு தந்தையார் பாடசாலையிலேயே தமிழ்நூல்கள் படித்தார். சிறு பருவத்திலேயே திருநாவுக்கரசு கல்வியின் சுவையை நன்கு உணர்ந்துகொண்டார். பிறகு அவ்வூரில் இருந்த ஒரு 'மிஷின்' பாடசாலையில் கல்விகற்று வகுப்பில் முதல்வராகத் தேறினார். பிறகு செங்கற்பட்டிற்குச்சென்று உயர்தரப் பாடசாலையில் எட்டாவது வகுப்பு வரையில் ஆங்கிலமும் தமிழும் நன்கு கற்றிருந்த திருநாவுக்கரசு, பள்ளியில் மாணவர்கட்கு விளங்காத தமிழ்ச்செய்யுட்களையெல்லாம் விளக்கத் தொடங்கினார். இதனால் இவருக்கு இவர் படித்த வகுப்பு மாணவர்கள் தமிழாசிரியர் என்று பெயர் கொடுத்து விட்டனர். பிறகு திருநாவுக்கரசு சென்னைமாநகரஞ் சென்றார். அங்குள்ள தொண்டைமண்டல உயர்தரப் பள்ளியிற் சேர்ந்து பத்தாவது வகுப்பு வரையில் படித்தார். அப் பாடசாலையில் அப்போது தலைமைத்தமிழாசிரியராக

விளங்கிய சிவப்பிரகாச ஐயர் என்னும் பெரும்புலவரிடம் 'தமிழ்ப் புலவன்' என்னும் பட்டத்தைப் பெற்றார். பள்ளிக் கூடத்தை விட்ட பின்னும் திருநாவுக்கரசு பேரூக்கங் கொண்டு தமிழ் நூல்களைக் கற்கத் தொடங்கினார்.

### திருமணம்

திருநாவுக்கரசின் திருமணம் அவருடைய இளமைப் பருவத்திலேயே நிகழ்ந்துவிட்டது. தமிழ் நூல்களை ஊக்கத்துடன் கற்றுக்கொண்டிருந்த திருநாவுக்கரசின் குடும்பத்தில் வறுமைப்பிணி மிகுந்தது. திருநாவுக்கரசு ஏதேனும் அலுவலைமேற்கொண்டு பொருளீட்ட வேண்டுமென்று அவருடைய தாயார் எண்ணினார். எவ்வளவோ முயன்றும் ஒரு வேலையும் அகப்படவில்லை. ஆகவே, திருநாவுக்கரசர் மேலும் மேலும் புதிய நூல்கள் பலவற்றை வாங்கி அவைகளைப் பயின்றுகொண்டே யிருந்தார்.

### அறிஞர்கள் கூட்டுறவு

அந்நாளில் பெத்துநாய்க்கன் பேட்டையில் பூவை கலியாணசுந்தர முதலியார் பெரும்புகழோடு விளங்கியிருந்தார். கலியாணசுந்தரரைப்பற்றி அறிந்துகொண்டிருந்த திருநாவுக்கரசு அவரிடம் சென்றுவரத் தொடங்கினார். கலியாணசுந்தரரின் அருங்குணங்கள் திருநாவுக்கரசின் உள்ளத்தைக் கவர்ந்தன. அவரிடம் அடிக்கடி சென்று பழகத் தொடங்கினார். நூல்களைப் பாடங் கேட்கவும் விரும்பினார். திருவிளையாடற்புராணம் முதல் சிவஞானபோதம் வரையில் பல நூல்களை அவரிடம் பாடங்கேட்டுப் பெருமகிழ்வடைந்தார். பாடங்கேட்கும் காலம் போக எஞ்சிய காலங்களினும் கலியாணசுந்தரரிடமே தங்கி அவருடைய பணிகளைப் புரியலானார். கலியாணசுந்தரரோடு அடிக்கடி

சொற்பொழிவுகட்குச் சென்று வந்தபடியால், திருநாவுக்கரசும் சைவச்சொற்பொழிவுகள் செய்யலானார்.

மறைமலையடிகளின் புகழையும் அடிக்கடி கேள்விப்பட்ட திருநாவுக்கரசு அவரிடமும் போய்ப் பழகத் தொடங்கினார். மறைமலையடிகளின் மாண்பும் நாவுக்கரசின் உள்ளத்தைக் கவர்ந்தது. மறைமலையடிகள் எல்லா நூல்களிலும் வல்லவர் என்பதை உணர்ந்த திருநாவுக்கரசு பட்டினப்பாலை முதலிய சங்கநூல்களை மறைமலையடிகளிடம் பாடங் கேட்கலானார். மறைமலையடிகளும் பூவை கலியாண சுந்தரரும் நாவுக்கரசிற்கு இரு கண்களாயினர். இருவருடைய கூட்டுறவாலும் திருநாவுக்கரசு பேரறிவும் உயர் பண்பும் பெற்றுப் புதுமனிதராக மாறிச் சிறந்து விளங்கலானார். இரு பேராசிரியர்களும் நாவுக்கரசை நண்பராக எண்ணினார்களேயல்லாமல் மாணவராக எண்ணவில்லை.

தாயார் மறைவு

தம் அறிவைப் பெருக்குவதிலேயே கண்ணுங் கருத்துமாக இருந்த நாவுக்கரசு தாயாரின் பேரவாவை முடிக்கவில்லை. பிள்ளை எத்தகைய அலுவலிலும் புகாமல் இப்படி வீணாகச் சுற்றுகிறதே; இது எப்படி முன்னுக்குவந்து குடும்பத்தை உயர்த்தப் போகிறது எனத் தாயார் மனம் வருந்தினார். அந்த மனவருத்தமே உடற்பிணியாக மாறியது. மண்ணுலகை விட்டுப் பிரியுங்காலமும் வந்தது. மகனை அண்மையில் அழைத்து மனம்நொந்தார். நாவுக்கரசு தாயாரைப் பார்த்து, “அம்மா நீ மனம் வருந்தாதே. நான் விரைவில் ஒரு வேலையை மேற்கொண்டு உடன்பிறந்தார்கட்கெல்லாம் உதவிசெய்து அவர்களையெல்லாம் முன்னுக்குக்கொண்டுவந்து விடுகிறேன்,” என்று உறுதிமொழி கூறினார். இவ் வுறுதிமொழியைக் கேட்ட தாயார் மன

வமைதியுடன் காலமானார். திருநாவுக்கரசு தம் உடன்பிறந்தார்கள் உளம் வருந்தாமல் அவர்களைத் தேற்றினார். பதினாறும் நாள் வீட்டிலே இரங்கற்கூட்டம் ஒன்றைக் கூட்டினார். தாயார்மீது "பிரிவாற்றாமை" என்று பாடி அச்சிட்டு வழங்கினார். தாயாரின் குணநலம் முதலியவைகளைக் குறித்துச் சிறந்த சொற்பொழிவுஒன்று நிகழ்த்தினார். மிக இளமைப்பருவத்தில் நாவுக்கரசு இயற்றிய செய்யுட்கள் ஓசை யின்பத்தையும், சொல்லழகையும், பொருளழகையும் பெற்றுத் திட்பமும் நுட்பமுஞ் செறிந்து விளங்கின.

### தமிழாசிரியர்

தாயை இழந்த நாவுக்கரசர் அலுவல் வேட்டையில் இறங்கினார். அவருடைய விருப்பத்திற்கேற்ற தமிழாசிரியர் வேலை உடனடியாக அகப்படவில்லை. பலவிடங்களில் வேலை தேடிய திருநாவுக்கரசு முடிவில் 'ஜீ. ஏ. நடேசன் புத்தக சாலை'யில் கணக்குப்பிள்ளைவேலை ஒன்றைப்பெற்று அதனை வெறுப்புடன் பார்த்து வந்தார். பிறகு அந்த அலுவலை விட்டுவிட்டு 'ஓ அண்டு கம்பெனி' அச்சுக்கூடத்தில் கணக்குப்பிள்ளைவேலை ஒன்றைப் பார்த்தார். அதுவும் பிடிக்காமல் பிறகு 'குமாரசாமி நாயுடு அச்சக'த்தில் பிழை திருத்தும்வேலை பார்த்தார். இந்த வேலையையும் விட்டு விட்டு நழுவுவதற்குச் சமயம் பார்த்துக்கொண்டிருந்தார். இந்தச் சமயத்தில் வேப்பேரி எஸ். பி. ஜி. உயர்தரப் பாடசாலையில் தமிழ்ஆசிரியர்வேலை ஒன்று காலியாயிற்று. அப்போது அப் பாடசாலையின் தலைமைத்தமிழாசிரியராக கா. நமச்சிவாய முதலியார் வேலைபார்த்துக்கொண்டிருந்தார். நமச்சிவாய முதலியாருக்கும் திருநாவுக்கரசிற்கும் நெருங்கிய பழக்கம் உண்டு. நமச்சிவாயர், காலியான இடத்திற்குத் திருநாவுக்கரசைப் புதிய தமிழாசிரியராக ஏற்

படுத்தினர். இவ் வேலையைப் பெற்ற நாவுக்கரசு தமது நோக்கத்திற்கு ஏற்றவாறு வேலையைப்பெற்றமையின் களிப்பென்னும் கடலில் ஆழ்ந்தார்.

திருநாவுக்கரசு தமிழாசிரியர்வேலையைப் பெற்ற காலத்தில் தமிழாசிரியர் வேலையின்நிலைமை மிகக் கீழ்த்தரமான நிலையில் இருந்தது. தமிழ்ப்புலவர்கட்குத் தக்க ஊதியம் இல்லை. ஆங்கில அரசாட்சியின் போக்கினல் தமிழின் மதிப்பு அடியோடு சீரழிந்து நின்றது. தமிழாசிரியர் என்றால் மாணவர்களும் மற்றைய ஆசிரியர்களும் தாழ்வாகவே கருதினர்கள். குறைந்த ஊதியத்தைப்பெற்ற தமிழாசிரியர்கள் நல்ல உடையணிந்து வகுப்புக்களில் கம்பீரமாகத் தோன்றுவதற்கு இயலவில்லை. இதனல் மாணவர்கட்கு ஆசிரியரிடத்து நன்மதிப்பும் பணிவும் ஏற்படாது போயின. அவர்கள் தமிழாசிரியர்கள் வகுப்புக்குள் நுழைந்தவுடன் கும்மாளமிட்டுப் பாடம் நடத்தமுடியாதபடி இடையூறு விளைத்துக்கொண்டிருப்பர். கா. நமச்சிவாயமுதலியார் இந்நிலைமையைப்போக்குவதற்கு எண்ணினர். மதிப்பான உடைகளை யணிந்து வகுப்புக்களில் தோன்றியதுடன் ஆங்கில ஆசிரியர்களையும் தோற்கடிக்கும் வகையில் விரிவுரையை இனிமை ததும்ப ஆற்றவும் தொடங்கினர். இதனல் மாணவர்கள் கட்டுண்டு தமது குறும்புகளை விடலாயினர். திருநாவுக்கரசும் நமச்சிவாயரைப் போலவே பெருமிதத்துடனும் சதுரப்பாடாகவும் வகுப்புக்களில் தோன்றிப் பாடம்நடத்தத் தொடங்கவே மாணவர்கள் அமைதியுடன் நடந்துகொள்ளலாயினர். இவ்வாறு வேப்பேரி பாடசாலையில் திருநாவுக்கரசு சில காலம் வேலைபார்த்தார்.

கலைமகள் வருகையும் அலைமகள் அருளும்

திருநாவுக்கரசு வேப்பேரியில் வேலைபார்த்துக் கொண்டிருக்கும்போது அவருடைய அருமைத் திரு மனைவி நவநீதம் விண்ணுலகம் புகுந்தார். உறவினர்கள் வழக்கம்போல் வருந்தினர். திருநாவுக்கரசரோ தமது வழக்கமான மனத்திண்மையுடன் இருந்தார். பல அன்பர் கள் இரங்கற்பாக்கள் பாடினர். திருநாவுக்கரசோ தம் மனைவி உயிருடன் இருக்கும்போதே அவருடைய குண நலன்களை வியந்து பாராட்டி அவர்மீது இருபத்தைந்து பாடல்கள் இயற்றி அவரிடமே படித்துக் காட்டிவிட்டார். இந்நிகழ்ச்சியை அறிந்தவர்கள் நாவுக்கரசர் தம்மனைவி இறந்து போகக்கூடும் என்று முன்னரே உணர்ந்திருந்தார் போலும் என்று எண்ணினார்கள். இந்நிலையில் திருநாவுக் கரசருக்கு முத்தியாலுப்பேட்டை உயர்நிலைப்பள்ளியில் தலைமைத் தமிழாசிரியர்வேலை கிடைத்தது. சிலகாலஞ் சென்றபின் நாவுக்கரசு சரசுவதி என்னும் பெயருடைய ஒரு மங்கையை இரண்டாவது மனைவியாகத் திருமணம் புரிந்து கொண்டார். இரண்டாவது திருமணமாகிய பின் திருநாவுக்கரசின் பொருளாதார நிலைமை சீர்பெற்றது. பத் திரிகைகட்குக் கட்டுரையெழுதுதல், சொற்பொழிவாற்றல் முதலிய பல வழிகளால் பெரும்பொருள் வரத் தொடங் கியது. இது முதல் நாவுக்கரசின் இல்வாழ்க்கை நல்வாழ்க் கையாக அமைந்தது.

கல்லூரியில் பேராசிரியர்

முத்தியாலுப்பேட்டை உயர்நிலைப்பள்ளியில் வேலை யேற்ற திருநாவுக்கரசர் அவ்வேலையைத் திறமுடனாற்றி னார். மாணவர்கள் நாவுக்கரசின் பேராற்றலை வியந்து பாராட்டினார்கள். நாவுக்கரசரின் புகழ் யாண்டும் பரவத்

தொடங்கியது. எதிர்பாராதவாறு பச்சையப்பன் கல்லூரி யில் தமிழ்ப்பேராசிரியர் வேலை கிடைத்தது. இதனால் நாவுக் கரசர் பெருமகிழ்ச்சியடைந்தார். பச்சையப்பன் கல்லூரி மாணவர்கள் நாவுக்கரசரின் மணிமொழிகளையும் அறிவுத் திறமையையுங் கண்டு வியந்து போற்றினார்கள். தமிழ்ப் பாடத்தை வேம்பென வெறுத்து நின்ற மாணவர்கள் இப் பொழுது அதனைக் கரும்பென விரும்பினார்கள். ஆசிரியர் எப்பொழுது வகுப்புக்கு வருவாரோ என்று ஏங்கி நின்றார் கள். நாவுக்கரசர் மாணவர்களிடத்தில் பேரன்புடையவர். ஒரு மாணவனுடைய உள்ளத்தையும் நோகச் செய்யார். மாணவர்கட்கு இன்பூட்டுவதே நாவுக்கரசரின் கடமையாக இருந்தது. கல்லூரியில் பேராசிரியராக அமர்த்தப்பட்ட சில ஆண்டுகளில் பல்கலைக்கழகத் தேர்வாளராகவும் ஏற் படுத்தப்பட்டார். பல்கலைக் கழகத்தில் புகுந்த நாவுக்கரசர் அங்குச் சில நற்செயல்களைப் புரியத்தொடங்கினார். தமிழி லும் வித்துவான், புலவன் முதலிய பட்டங்கள் தோன்ற வேண்டுமென்று விரும்பினார். அதற்காகப் பெருமுயற்சி செய்தார். நாவுக்கரசரின் முயற்சியோடு நமச்சிவாயரு டைய முயற்சியும் சேரவே பலன் உண்டாகியது. கல்லூரி களில் தமிழ்ப்புலவர்களும் பட்டம் பெறுவதற்கு வழியுண் டாகியது.

பொது நலத்தொண்டு

நாவுக்கரசர் சொற்பொழிவாற்றுவதில் தேர்ச்சி பெற்றிருந்தார். பொதுமக்களின்பொருட்டுப் பல பேரவை களிலும் சொற்பொழிவுகள் செய்து பொதுமக்களுடைய அறிவையும் பண்படுத்தினார். வெளியூர்கட்குச் சென்று சங்கங்களில் தலைமைதாங்கிச் சொற்பொழிவுகள் பல செய்தார். நாவுக்கரசருக்குச் சென்னைமாநகரிலே

மாணவர்கள் பலர் தோன்றினார்கள். எத்தகைய பயனை யுங்கருதாமல் எண்ணற்ற மாணவர்கட்குக் கல்வியைப் போதித்துத் தமிழ்த்தொண்டு செய்தார். பத்திரிகைகள் பொதுமக்களின் அறிவுவளர்ச்சிக்குப் பேருதவியாக இருக்கும் என்பது நாவுக்கரசர் கொள்கை. அந்நாளிலே பத்திரிகைகள் அதிகமில்லை. விரல்விட்டு எண்ணத்தக்க வாறு சில பத்திரிகைகளே நாட்டில் நடைபெற்றன. நாவுக்கரசர் திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தாரோடு கலந்துபேசிச், "செந்தமிழ்ச் செல்வி" என்னும் திங்கள் வெளியீட்டை வெளிப்படுத்தச் செய்தார். டாக்டர் மாசிலாமணி முதலியார் என்பவரைக் கொண்டு "தமிழரசு" என்னும் கிழமைவெளியீட்டை வெளிப்படுத்தச் செய்து, தாமே அதன் ஆசிரியராக அமைந்து நின்று பல கட்டுரைகள் எழுதினார்.

மறைவு

காலமெல்லாம் தமிழ்வளர்ச்சியில் உழைத்து நின்ற நாவுக்கரசர் தீண்டாமை விலக்கு முதலிய முன்னேற்றத் துறைகளிலும் முன்னணியில் நின்று தாமே நடைமுறையில் தீண்டாமையை விலக்கி அனைவரையுந் தீண்டிக்காட்டினார். 1931-ஆம் ஆண்டில் மேத்திங்களில் திருநாவுக்கரசருக்குத் திடீரென மார்புநோய் வந்தது. தமது நாற்பத்து மூன்றாவது ஆண்டில் முடிந்துபோனார். நாவுக்கரசருடைய மறைவு தமிழ்த்தாய்க்கு ஈடுசெய்யமுடியாத ஒரு பெரிய பேரிழப்பாக முடிந்துவிட்டது. மறைமலையடிகள் தம் அருமை மாணவரை இழந்தது குறித்துப் பெரிதும் வருந்தினார். மற்றைய அறிஞர்களும் பிறரும் வருந்தினார்கள். நாவுக்கரசரின் உறவினரும் மனைவி மைந்தர்களும் இன்று நலத்துடன் வாழ்கின்றனர்.

இயற்றிய நூல்கள்

1. அறநெறி விளக்கம்
2. புலவர் கதை
3. திருக்கண்ணப்பன்
4. குமணன்
5. இராசராசன்
6. சண்பகவல்லி
7. பாமணிக்கோவை
8. உரைமணிக்கோவை
9. திருவருட்பாத் திரட்டு
10. பல்பொருட் கட்டுரை
11. செந்தமிழ் வாசகங்கள்

முதலியன நாவுக்கரசரின் நூல்களாகும்.

---

## அ. வ. உ. சிதம்பரம்பிள்ளை

தோற்றம்

கப்பலோட்டிய தமிழன் என்று புகழ்பெற்ற வ. உ. சிதம்பரனார் 1872-ஆம் ஆண்டு செப்டம்பர்த்திங்கள் 5-ஆம் நாளன்று எட்டையபுரத்திலே பிறந்தார். சிதம்பரனாரின் தந்தையார்பெயர் உலகநாதபிள்ளை. தாயார் பெயர் பரமாயி அம்மையார். உலகநாதபிள்ளையின் முன்னோர் ஓட்டப்பிடாரத்திலே வாழ்ந்திருந்தனர். உலகநாத பிள்ளை தொழில் முன்னேற்றங்காரணமாக எட்டையபுரத்திற்குக் குடியேறினார். சிதம்பரனார்க்கு உடன் பிறந்தார் அறுவர். சிதம்பரனார் தொடக்கப்படிப்பை எட்டையபுரத்தில் தொடங்கினார். கருத்துடன் படித்துத் தொடக்கக்கல்வியை விரைவில் முடித்தார். பிறகு தூத்துக்குடிக்குச் சென்று கால்டுவெல் பள்ளிநிலையத்தில்

சேர்ந்தார். தாய்மொழிப்பற்று சிதம்பரனார்க்கு இயற்கையாகவே அமைந்திருந்தது. சிதம்பரனார் உயர்நிலைப்பள்ளிப் படிப்பை விரைவில் முடித்தார். ஒட்டப்பிடாரத்தில் தாலுகா அலுவலகத்தில் வேலை ஒன்று கிடைத்தது. சின்னாள் அவ்வேலையைப் பார்த்தார். அவர் மனம் அத்தொழிலில் பற்றுக்கொள்ளவில்லை. திரிசிரபுரஞ்சென்று சட்டக்கல்லூரியிற் சேர்ந்து வழக்கறிஞர் தொழிலுக்குப் படித்தார். அப்படிப்பில் தேர்ச்சிபெற்றார். வழக்கறிஞர் தொழிலை மேற்கொண்டார். பொய் வழக்குகளில் புகாமல் மெய்வழக்குகளில் மட்டும் சொற்போரிட்டு வெற்றிகண்ட சிதம்பரனாரின் புகழ் யாண்டும் பரவத்தொடங்கியது.

திருமணம்

சிதம்பரனார்க்குத் திருமண அகவை வந்தது. திருச்செந்தூரில் இருந்த சுப்பிரமணியபிள்ளை என்பவரின் திருமகளான வள்ளியம்மைக்கும் சிதம்பரனார்க்கும் திருமணம் இனிது நடைபெற்றது. வள்ளியம்மையார் தெள்ளிய அறிவு மிக்காராய்க், கொண்டான் குறிப்பறிந்தொழுகும் ஒண்டொடியாக அமைந்து நின்றார். இல்லற வாழ்க்கை இனிது நடைபெற்றது. வள்ளியம்மையார் சிதம்பரனாரின் உள்ளம் முழுவதையுங் கவர்ந்து நின்றார். தக்காங்கமைந்த வாழ்க்கைத்துணையினர் தாரணியில் நெடிது நாள் தங்குதல் அரிது. கூற்றுவன் அவர்களது கூட்டுறவைப் பிரித்து வேடிக்கை பார்க்கும் இயல்பினன். வள்ளியம்மையார் திடீரென்று இறைவன் திருவடிநீழலை எய்தினர். மனைவியார்பிரிவு சிதம்பரனார்க்கு மனவருத்தத்தை அளித்தது. அம்மையார்மீது கையறுநிலைப் பாக்கள் பல பாடி உள்ளங்கலங்கினர்.

“என்னுடைய நேயர்களும் ஏழைபர தேசிகளும்
என்னுடைய வீடுவந்தால் எந்திழைதான்—தன்னுடைய

பெற்ரோர்வந் தார்களெனப் பேணி உபசரிப்பாள்
கற்ரோரும் உள்ளுவக்கக் கண்டு.”

என்பது சிதம்பரனர் பாடிய கையறுநிலைப் பாக்களுள் ஒன்ருகும்.

மறுமணமும் நாட்டுத்தொண்டும்

மீனுட்சி என்ற பெண்ணைச் சிதம்பரனர் இரண்டாம் மனைவியாகத் திருமணம் புரிந்தார். இவ்வம்மையாரும் வள்ளியம்மையாரைப்போல் இன்குணங்கள் பலவும் இயைந்த ஏந்திழையாக இருந்தமையின் இல்வாழ்க்கை மேலும் இனிமையாகவே அமைந்தது. வழக்கறிஞராகத் தொழில் நடத்திய சிதம்பரனர் தமிழறிஞராகத் தமிழையும் நன்கு ஆராய்ச்சி செய்து கொண்டிருந்தார். அந்நாளிலே ஆங்கிலேயர்கள் கட்டபொம்மனிடத்தில் காட்டிய கன்னெஞ்சச் செயல்கள் சிதம்பரனரின் உள்ளத்தில் அடிக்கடி புகைந்து கொண்டிருந்தன. அச்செயல்களை எண்ணுந்தோறும் எண்ணுந்தோறும் சிதம்பரனர் உள்ளம் புண்ணுகியது. நாட்டு விடுதலைக்கு உழைக்கவேண்டியது தமது கடமையென உள்ளத்தில் துணிந்தார்.

அந்நாளில் வங்காளப் பிரிவினைக்கிளர்ச்சி ஏற்பட்டது. வங்காளநாட்டை இரண்டாகப் பிரித்தமையின் அக்கிளர்ச்சி ஏற்பட்டது. வடநாட்டில் எழுந்த அக்கிளர்ச்சி தென்னுட்டிலும் பரவியது. தென்னுட்டுக் கிளர்ச்சியைச் சிதம்பரனர் முன்னின்று நடத்தினர். ஆங்காங்குக் கூட்டங் கூட்டிச் சொற்பொழிவுகள் செய்தார். வெளிநாட்டுப் பொருள்களை விலக்கவேண்டும் என்று மக்களை வேண்டிக் கொண்டார். வெளிநாட்டுப்பொருள்கள் பல தீக்கடவுளுக்கு உணவாயின. சிதம்பரனர் சென்னையை அடைந்தார். சி. சுப்பிரமணியபாரதியாருக்கும் அவருக்கும் நெருங்கிய தொடர்பு ஏற்பட்டது.

சூரத் காங்கிரஸ்

1907-ஆம் ஆண்டில் சூரத் என்னும் ஊரில் காங்கிரசை நடத்தத் திட்டம் போடப்பட்டிருந்தது. மிதவாதிகள் தீவிரவாதிகள் என்று இரண்டு கட்சியினர் தம்முள் போட்டியிட்டனர். திலகர் தீவிரக்கட்சியின் தலைவராய்த் திகழ்ந்தார். இருகட்சியினருக்கும் கருத்து வேற்றுமைகள் ஏற்பட்டன. மிதவாதிகள் ராஷ்பிகாரி கோஷ் என்பவரைக் காங்கிரஸ் தலைவராக்க முயன்றனர். தீவிரவாதிகளோ லாலா லசபதிராய் என்பரைத் தலைவராக்க முயன்றனர். திலகர் சிதம்பரனாரிடம் நன்மதிப்புக் கொண்டிருந்தார். ஆகவே, சிதம்பரனார் பிரதிநிதிகள் பலரோடு காங்கிரசுக்கு வரவேண்டுமென்று வேண்டுகோள் விடுத்தார். பாரதியாரைக் கலந்து எண்ணியபின் சிதம்பரனார் பிரதிநிதிகள் பலரோடு புறப்பட்டுச் சூரத்திற்குச் சென்றார். அங்கு இருகட்சியினரும் போராட்டத்தில் இறங்கினர். மிதவாதிகள் திலகரைத் தாக்க முயற்சித்தனர். சிதம்பரனார் தம் திருக்கூட்டத்தினரோடு ஒன்றுபட்டுத் திலகரைக் காத்தார். கூட்டங்குழப்பமாக முடிந்தது; எல்லோரும் தத்தம் ஊர்கட்குத் திரும்பினர்.

கப்பல் முயற்சி

தமிழ் நூல்களை ஆழ்ந்து பயின்ற சிதம்பரனார், தமிழர்கள் கப்பலோட்டிக் கடல்கடந்து வாணிபஞ்செய்து பொருளீட்டியவர்கள் என்பதை ஐயமறக்கண்டார். வெள்ளையர்கள் அத் துறையைக் கைப்பற்றிக் கொள்ளை கொள்ளையாகப் பொருளீட்டிக்கொண்டு போதல் முறையற்றசெயல் என்று முடிவு செய்தார். தாம் கப்பல் ஓட்டுந் தொழிலை மேற்கொள்ளவேண்டும் என்று திட்டம் போட்டார். இத்திட்டத்தின் பயனாய், "சுதேசி ஸ்டீம் நாவி

கேஷன்" என்னும் பெயருடன் கப்பல் கம்பெனி ஒன்றை இயக்க முடிவுசெய்தார். அதற்குப் பெரும்பொருள் வேண்டியதாக இருந்தது. பெருஞ்செல்வர் பலரிடஞ் சென்று தம் நோக்கத்தைக் கூறினர். பாண்டித்துரைத் தேவர் ஆறாயிர ரூபாக்கள் கொடுக்க இசைந்தார். வேறு பலரும் பெருந்தொகை கொடுக்க முன்வந்தனர்.

பம்பாய்க்குச் சென்று கப்பல்கட்டும் பணியில் ஈடுபட்டார். திலகரும் சிதம்பரனார் முயற்சிக்குப் பெருந்துணை புரிந்தார். இறுதியில் இரண்டு கப்பல்கள் சிதம்பரனாரால் கட்டி முடிக்கப்பட்டன. சிதம்பரனார் கப்பல்களுடன் தூத்துக்குடியை அடைந்தார். மக்கள் பேராரவாரத்தோடு அவரை வரவேற்றனர். சிதம்பரனாருடைய கப்பல்கள் ஆங்கிலேயர்களுடைய கப்பல்களோடு போட்டி போட்டுக் கடலில் ஓடத்தொடங்கியது. இதனைக் கண்டு ஆங்கிலேயர்கள் அளவிடற்கரிய பொறாமை கொண்டனர். கப்பலோட்டும் போட்டியைச் சிதம்பரனார் கைவிட்டு விட்டால் பெருந்தொகை அளிப்பதாக மருட்டினர். சிதம்பரனாரோ எதற்கும் அசைந்து கொடுக்கவில்லை. ஆகவே, சிதம்பரனாருடைய கப்பல்களும் போட்டியிட்டன.

சிறைவாழ்க்கை

சிதம்பரனார் கப்பலோட்டிய தொழிலோடு அமைந்திருப்பின் அவர் வாழ்க்கை சிறப்படைந்திருக்கும். ஆனல், சிதம்பரனார் தமது முழுக்கருத்தையும் நாட்டுவிடுதலையிலேயே செலுத்தினர். அடிக்கடி கூட்டங்கள் கூட்டி ஆங்கில அரசினருக்கு எதிராகச் சொற்பொழிவுகள் செய்தார். சிதம்பரனாருடைய வீரச்சொற்பொழிவுகள் மக்களைப் பலமாகத் தட்டியெழுப்பின. அதனல் நாட்டின் பல பாகங்களிலும் விடுதலை முழக்கம் வீறுகொண்டெழுந்தது. சிறைசென்று மீண்ட விடுதலைவீரர் ஒருவரைப்

போற்றுதற்கு நெல்லை மாவட்டம் எங்கணும் சிறந்த ஏற்பாடுகள் செய்யப்பட்டன. ஆஷ் என்னும் பெயருடையவனும் ஆங்கிலேயனும் மாவட்டத்தலைவனுமான வெள்ளையன் ஒருவன், "சிதம்பரனாரும் சுப்பிரமணிய சிவாவும் கூட்டங்களில் கலந்துகொள்ளுதல் கூடாது," என்று தடைக் கட்டளை ஏற்படுத்தினான்.

மாவட்டத்தலைவனது கட்டளையைச் சிதம்பரனாரும், சிவாவும் ஒரு பொருளாக மதிக்கவில்லை. கட்டளையை மீறிக் கூட்டங்களில் சொற்பொழிவுகள் நிகழ்த்தினார்கள். ஆங்கிலேயர் புரியும் அட்டூழியங்கள் அக் கூட்டங்களிலே நன்றாக எடுத்துக் கூறப்பட்டன. இருவரையுந் தூக்குக் குடியில் கைதியாக்கினால் பொதுமக்களால் தொல்லை யேற்படும் என்று எண்ணிய கலெக்டர் ஆஷ் துரை, இருவரையும் நெல்லைக்கு வருமாறு கட்டளை யிட்டான். இருவரும் அங்குச் சென்றனர். திருநெல்வேலி மாவட்டத்திற்குள் இருவரும் இருத்தல் கூடாது என்று கட்டளையிட்டான். இருவரும் அக் கட்டளையை மீறித் திருநெல்வேலிமாவட்டத்தில்தானே இருந்தார்கள். கட்டளையை மீறியதற்காக ஆஷ் துரை இருவரையுங் கைதுசெய்தான். இதனால் பொதுமக்களிடையே கொந்தளிப்பு மிகுதியாயிற்று. பலவிடங்களிலும் பலவகையான அல்லல்கள் நேர்ந்தன. சுப்பிரமணிய சிவாமீதும், சிதம்பரனார்மீதும் பல குற்றங்கள் சாட்டப் பெற்று நீதிமன்றத்திலே வழக்கு நடந்தது. சிதம்பரனார்க்கு 40 ஆண்டுக் காவல் தண்டனையும் சிவாவுக்குப் பத்துஆண்டுக் காவல் தண்டனையும் விதிக்கப்பட்டன. இம் முடிவு பொதுமக்களாலும் பத்திரிகைகளாலும் பலமாகக் கண்டனத்திற்குள்ளாயிற்று.

சிதம்பரனாரின் மனைவியார் இத்தண்டனையை அறிந்து உள்ளம் வருந்தினார். தண்டனையை மாற்றுமாறு

உயர்தரநீதிமன்றத்திற்கு விண்ணப்பம் அனுப்பினர். நீதிபதிகள் வழக்கை மீண்டும் உசாவினர். சிதம்பரனாருடைய தண்டனை ஆறாண்டுக்காலமாகக் குறைந்தது.

ஆங்கிலேயருடைய ஆட்சிக்காலத்தில், நாட்டு விடுதலைக்கு உழைத்த நாட்டுத்தொண்டர்கள் சிறையிலே ஈவிரக்கமில்லாமல் பலவாறு துன்புறுத்தப்பட்டார்கள். உணவோ உண்ணுந்தரத்ததாக இராது. கோலமோ பைத்தியக்காரக் கோலத்தினும் படுமோசமாக இருக்கும். சிதம்பரனார்க்கு விதிக்கப்பட்ட தண்டனையைக்கேட்டு மக்கள் உள்ளங் குமுறினர். செய்வகையறியாது திருந்தனர்.

சிறையில் தொல்லை

சிதம்பரனாருக்குச் சிறைக்கோட்டஞ் சென்றவுடன் கடுமையான வேலைகள் கொடுக்கப்பட்டன. முதற்கண் சணற் கயிறு சுற்றுகிற பொறி கொடுக்கப்பட்டது. அப் பொறியைச் சுற்றியபடியால் சிதம்பனாரின் கைத்தோல் நைந்து புண்ணாகியது. பிறகு செக்கிழுக்கும் வேலை கொடுக்கப்பட்டது. நாட்டுமக்கள் இச் செய்தியை உணர்ந்தனர். அவர்கள் உள்ளங் குமுறியது. எந்தச்சமயத்திலும் விபரீதமான நிலைமை ஏற்படக்கூடும் என்னும் எண்ணம் அதிகாரிகளுக்கு உண்டாகியது. அதன்பின் அந்நிலை ஒருவாறு மாறியது. சிதம்பரனார் தமக்கு ஏற்பட்ட துன்பங்களை ஒரு பொருளாக மதிக்கவில்லை. எல்லாம் இறையருட்செயலே என்று துணிந்து தென்புடனிருந்தார். ஐந்தாம் சார்ச் அரசருக்கு 1912-ஆம் ஆண்டில் முடிசூட்டு விழா நிகழ்ந்ததன் நினைவுக்குறியாகப் பல குற்றவாளிகள் விடுதலை செய்யப்பட்டனர். அச்சமயம் சிதம்பரனார்க்கும் விடுதலை கிடைத்தது. விடுதலையாகி வெளிவந்த வீரர்

சிதம்பரனாரை வரவேற்பதற்குக் கூட ஆளில்லை. மக்கள் ஆங்கில அரசினரின் கொடுங்கோலாட்சிக்கு அஞ்சிப் பெட்டிப்பாம்பாக இருந்தனர். சுப்பிரமணிய சிவாவும் பாரதியாருமே சிதம்பரனாரை வரவேற்றுப் போற்றியவர்கள்.

தமிழ் நூல்கள் இயற்றல்

விடுதலையாகி வெளிவந்த சிதம்பரனார் சென்னையிற் சிலகாலம் தங்கினார். நாட்டுத்தொண்டில் நலிந்துநின்ற அவருள்ளம் தமிழ்த்தொண்டில் சென்றது. சில நூல்களை அச்சிடுவதற்குச் செப்பம்செய்தார். பிறமொழிச் சார்பாக சில நூல்களை எழுதினார். சிதம்பரனாரை வறுமை பற்றியது. இழந்துபோன வழக்கறிஞர் வேலையை வாலஸ் என்னும் வெள்ளைநீதிபதி வாங்கித் தந்தார். பிறகு சிதம்பரனார் வழக்கறிஞர் வேலையோடு தமிழ்த்தொண்டையுஞ் செய்துகொண்டு தம் காலத்தைப் போக்கினார். சிதம்பரனாரால் அடியில் வரும் நூல்கள் இயற்றப்பட்டும் செப்பனிடப்பட்டும் வெளியிடப்பட்டன.

1. அகமேபுறம்
2. வலிமைக்கு மார்க்கம்
3. மனம்போல வாழ்வு
4. மெய்யறிவு
5. மெய்யறம்
6. இன்னிலை
7. தொல்காப்பியம் பொருளதிகார உரை
8. ௸ எழுத்ததிகார உரை
9. திருக்குறள் மணக்குடவர் உரை
10. முதல்மனைவி வள்ளியம்மை வரலாறு
11. அரசியற் சொற்பொழிவுகள்

முதலியன. பாரதியார் பாடல்களிற் பெரும் பாலானவை தோன்றுதற்குச் சிதம்பரனார் மூலகாரணராக இருந்தார்

எனல் மிகையாகாது. விடுதலைத் தொண்டனுக்கும், ஆங்கிலேயனுக்கும் உரையாடல்போறச் செய்யப்பட்டுள்ள செய்யுட்கள் சிதம்பரனாரையும், ஆஷ் துரையையுமே குறிப்பிட்டுக் காட்டுவன என்று கூறலாம்.

முடிவுரை

பாரதத்தாயின் விடுதலையைக் காணும் பேறும் சிதம்பரனார்க்கு வாய்க்கவில்லை. 1936-ஆம் ஆண்டு நவம்பர்த் திங்கள் 18-ஆம் நாள் சிதம்பரனார் மண்ணுலக வாழ்வை நீத்தார். சிதம்பரனார் அருளே உடலாக அமையப்பெற்றவர். தமது துன்பத்தை அணுவும் பொருட்படுத்தார். பிறருடைய துன்பத்தைக் காணிலோ எரியின் இழுதாய் உருகுவர். இந்நாளில் தூத்துக்குடிக்கும், இலங்கைக்கும் வ. உ. சிதம்பரம் என்னும் பெயர் தாங்கிய கப்பல் ஒன்று ஓடிக்கொண்டிருக்கிறது. தூத்துக்குடியில் சிதம்பரனார் பெயரால் கல்லூரி யொன்றும் தோன்றியிருக்கிறது. தமிழ்நாடெங்கணும் வ. உ. சிதம்பரம் வாசகசாலை என்னும் பெயருடன் பல வாசகசாலைகள் தோன்றியுள்ளன. சிதம்பரனாரின் பெயரைக்கொண்ட தெருக்களும் பல உண்டாகியிருக்கின்றன. நாட்டுத்தொண்டராகவும், தமிழ்த் தொண்டராகவும் ஒருங்கே விளங்கிய பெருமை சிதம்பரனார் ஒருவருக்கே சிறப்பானதென்றுகூறல் சாலும். சிதம்பரனாரின் தொண்டை அவருடைய பகைவர்களும் மனமாரப் போற்றி வாயார வாழ்த்தியிருக்கின்றனர். என்றென்றும் சிதம்பரனார் திருப்பெயர் இந்நிலவுலகில் இனிது நிலைபெற்று விளங்குக.

## ௯. கா. நமச்சிவாய முதலியார்

### பிறப்புங் கல்விப் பேறும்

வடார்க்காடுமாவட்டத்தைச் சேர்ந்த காவேரிப்பாக்கம் என்னும் ஊரிலே இராமசாமிமுதலியார் என்பவருக்கும் அகிலாண்டவல்லி அம்மையார் என்பவருக்கும் அருமைத் திருமைந்தனாகத் தோன்றினார் நமச்சிவாய முதலியார். முதலியார் பிறந்தது 1876-ஆம் ஆண்டு பிப்ரவரித்திங்கள் பத்தாம் நாள் வெள்ளிக்கிழமையாகும்.

இராமசாமிமுதலியார் நற்குணமும் நல்லியல்பும் அமையப்பெற்றவர். அவர் தமது ஊராகிய காவேரிப்பாக்கத்திலே பாடசாலை ஒன்றை ஏற்படுத்தி மாணவர்கட்குக் கல்வி போதித்தார். ஏழ்மை நிலையினராதலின் பாடசாலையில் அகப்படும் சிறுஊதியத்தைக் கொண்டே வாழ்க்கையை நடத்தினார். நமச்சிவாயர் தம் தந்தையாரின் பாடசாலையிலேயே கல்விகற்கத் தொடங்கினார். நல்வழி, நன்னெறி, நீதிநெறி விளக்கம், விவேக சிந்தாமணி முதலிய நூல்களைத் தந்தையாரிடமே படித்தார். பதினைந்தாண்டு வரையில் தந்தையாரிடமே கல்விபயின்ற நமச்சிவாயர் பதினாறும் ஆண்டில் சென்னையை அடைந்து தண்டையார் பேட்டையிலே ஒரு தொடக்கப்பள்ளியின் முதல்வகுப்பு ஆசிரியராக வேலை பார்த்து அதனால் வரும் ஊதியத்தைக் கொண்டு காலங் கடத்தினார்.

### மேலும் கல்விகற்றல்

சண்முகம்பிள்ளை என்னும் பெருந்தமிழ்ப் புலவர் ஒருவர் அந்நாளில் தொண்டைமண்டலம் துளுவவேளாளர் பாடசாலையில் தமிழாசிரியராக இருந்தார். அவருடைய புகழ் யாண்டும் பரவிநின்றது. சண்முகம்பிள்ளையின்

பெருமையைப் பற்றி அடிக்கடி கேள்வியுற்ற நமச்சிவாயர் சண்முகம்பிள்ளையிடங் கல்விகற்றுத் தாமுஞ் சிறப்படைய வேண்டும் என்று பேரார்வங்கொண்டார். சண்முகம் பிள்ளையைக் கண்டு தம் விருப்பத்தைக் கூறினார். சண் முகம்பிள்ளை நமச்சிவாயரைத் தம் மாணவராக ஏற்றுக் கொண்டார். நன்னாளொன்றிலே நமச்சிவாயருக்குப் பாடந் தொடங்கினார். நமச்சிவாயர் பன்னிரண்டு யாண்டுகள் சண் முகம் பிள்ளையிடம் இலக்கிய நூல்கள், இலக்கண நூல்கள், சங்க நூல்கள், காவியங்கள் முதலியவைகளை ஐயந்திரிபறக் கற்று அவைகளிலெல்லாம் வல்லவரானார். சண்முகம் பிள்ளைக்கு மக்கட்பேறின்மையால் நமச்சிவாயரையே தம் மகனாக எண்ணினார். தம் இறுதிக்கடனை நமச்சிவாயரே ஆற்றவேண்டுமென்றார். நமச்சிவாயர் அவ்வாறே சண் முகம்பிள்ளை காலமான பிறகு இறுதிக்கடன்களை ஆற்றிய துடன் சண்முகம்பிள்ளையின் மனைவியையும் தாயைக் காப்பாற்றுதல்போல் பேணிக் காப்பாற்றினார்.

ஆசிரியத்தொழில்

கல்வியை நன்குகற்றுத் தேறிய நமச்சிவாயருக்கு அந்நாளில் தமிழாசிரியர் வேலை எளிதாகக் கிடைக்கவில்லை. 1895-ஆம் ஆண்டில் சென்னை நீதிமன்றத்தில் ஒரு சிறிய அலுவலைப் பெற்று அதனை ஓராண்டு வரையில் மேற்கொண் டிருந்தார். நமச்சிவாயருடைய எண்ணம் தமிழாசிரியராக வேண்டும் என்பதுதான். முதலில் செயிண்ட்சேவியர் உயர்நிலைப்பள்ளியில் தமிழாசிரியர் வேலை அகப்பட்டது. மாணவர்களின் மனம் மகிழுமாறு நமச்சிவாயர் தமிழ்ப் பாடங்களை நன்கு கற்பித்து மாணவர்களின் உள்ளங்களைக் கவர்ந்தார். மாணவர்களின் பொருட்டுச் சிறு இலக்கண நூல் ஒன்றை உரைநடையில் வெளியிட்டார். பிறகு நமச்சி

வாயர் இராயபுரத்தில் உள்ள நார்த்விக் மகளிர்பாடசாலை யில் தமிழாசிரியராக அமர்ந்தார். அங்குச் சில ஆண்டுகள் சென்றபின், சிங்கிலர் கல்லூரியில் தமிழாசிரியரானார். அதன்பின் வேப்பேரியில் எஸ். பி. ஜி. உயர்நிலைப்பள்ளி யில் தமிழாசிரியராக அமர்ந்து தொண்டாற்றினார். இந்தப் பள்ளியில் இருக்கும்போதுதான் நமச்சிவாயர் பள்ளிமாண வர்கட் கேற்ற பாடப்புத்தகங்களை எழுதத் தொடங்கினார். அப் பாடப்புத்தகங்களால் நமச்சிவாயருக்குப் பெரும் புகழும் அரும்பொருளும் நிறையக் குவிந்தன. அதன் பிறகு நமச்சிவாயருடைய வாழ்க்கை சீருஞ்சிறப்பும் உடைய தாகத் திகழ்ந்தது.

திருமணம்

1906-ஆம் ஆண்டில் நமச்சிவாயருக்குத் திருமணம் நடந்தது. வாழ்க்கைத்துணைவியாக அமைந்த செல்வி யின் பெயர் சுந்தரம்மாள். சுந்தரம்மாள் கொண்டான் குறிப்பறிந்தொழுகும் ஒண்டொடியாக மிளிர்ந்தார். விருந் தோம்புதல் வறியார்க்கீதல் முதலிய நற்செயல்கள் அம்மை யாரிடஞ் செம்மையாகச் சிறந்துநின்றன. நமச்சிவாயர் இல்லத்திற்கேகும் புலவர் பெருமக்களும் நண்பர்களும் நல் விருந்துண்டு மகிழ்ந்தனர். நாளடைவில் நமச்சிவாயர் நன் மக்கட் பேற்றையும் நன்கடைந்து மகிழ்ந்தார்.

மேரிராணி கல்லூரி

1914-ஆம் ஆண்டில் அரசியலார் மேரிராணியார் கல்லூரியை ஏற்படுத்தினார்கள். அக் கல்லூரிக்குத் தமிழா சிரியர் அகப்படுவது அருமையாக இருந்தது. புதிதாகத் தோன்றிய கல்லூரிக்கு எவரும் ஆசிரியராகச் செல்லத் துணியவில்லை. நமச்சிவாயர் அக் கல்லூரியின் தமிழாசிரியர்

வேலையை ஒப்புக்கொண்டு மாணவிகள் மனம் மகிழுமாறு தமிழ்ப்பாடங்களைக் கற்பித்தார்.

பிறசெயல்கள்

1917-ஆம் ஆண்டில் அரசியலார் நமச்சிவாயரைச் சென்னைப் பல்கலைக்கழகத்தின் தமிழ்ப்போர்டில் தலைமைத் தேர்வாளராக ஏற்படுத்தினர். பிறகு 1918-ஆம் ஆண்டில் தமிழ்க்கல்வி அரசாங்கச் சங்கத்தில் உறுப்பினரானார். அப்போது அச் சங்கத்தின் தலைவராக இருந்த அனவரத விநாயகம்பிள்ளை இலங்கைக்குச்செல்ல நேரிட்டது. நமச்சிவாயரே அப்போது அத் தலைமைப்பதவியை ஏற்று 1920-ஆம் ஆண்டுமுதல் 1934-ஆம் ஆண்டு வரையில் அரும்பெருந் தொண்டாற்றிப் பேரும்புகழும் பெற்றார். சென்னைப் பல்கலைக்கழக வித்துவான் பட்டங்கள் பெரும் பாலும் வடமொழி படித்தவர்களுக்கே கொடுக்கப்பட்டன. அப் பட்டத்தை அடையவேண்டுமானால், தமிழோடு வட மொழியையேனும் அல்லது வேறுமொழிகளில் ஒன்றை யாகிலும் கற்கவேண்டும். புலவர் கல்விக்கு அஃதோர் இடையூறாக இருந்தது. பலர் புலவர்பட்டத்தைப்பெறுதற்கு கனவில் கூட எண்ணுவதில்லை. நமச்சிவாயர் அச் சங்கத் தின் தலைவராக வந்ததும் மேற்கூறிய இடையூற்றைப் போக்கினார். தமிழ்மொழி ஒன்றிலேயே இலக்கண இலக்கிய நூல்களை நன்கு பயின்றவர்கட்குப் புலவர்பட்டம் கொடுக்க லாம் என்று கூறினார். அவர் கருத்தை அரசியலாரும் ஏற்றுக்கொண்டனர். இதன் பின்னரே தனித்தமிழ்ப் புலவர்தேர்வு தோன்றியது. தமிழ் அறிஞர்களும் மிகுதி யாகத் தோன்றுவாராயினர். இந்நாளில் யாண்டும் தமிழ்ப் புலவர்கள் மிகுந்திருப்பதற்கு நமச்சிவாயரின் நல் தொண்டேகாரணமாகும். நமச்சிவாயர் பிறகு மேரிராணி கல்லூரியைவிட்டு இராசதானிக் கல்லூரியில் ஆசிரியரானார்

யாண்டுஞ் சிறந்து விளங்கி நற்பெயர் எடுத்தாற்போலவே, அக் கல்லூரியிலும் நற்பெயர் எடுத்தார்.

நூலாசிரியர்

மாணவர்களுக்கேற்ற தமிழ்ப்பாடப் புத்தகங்களை எழுதுவதில் நமச்சிவாயர் தேர்ச்சிபெற்றவராகத் திகழ்ந்தார். 1905-ஆம் ஆண்டு முதலே அவர் பாடப்புத்தகங்களை எழுதத் தொடங்கிவிட்டார். அவருடைய பாடப்புத்தகங்கள் மாகாணம் எங்கும் உள்ள பள்ளிகளிலெல்லாம் பாடமாக வைக்கப்பெற்று மாணவர்களுக்குக் கற்பிக்கப் பட்டன. நமச்சிவாயருடைய உரைநடை எளிய இனிய போக்கில் இளஞ்சிறூர்கள் கற்பதற்கேற்ற முறையில் அமைந்திருந்தது. 1909-ஆம் ஆண்டில் பிருதிவிராசன் நாடகத்தை எழுதி வெளியிட்டார். 1910-ஆம் ஆண்டில் கீசகன் நாடகம் வெளிவந்தது. இந் நாடகங்களை அறிஞர்கள் பலரும் பாராட்டினார்கள். இவைகள் பல அரங்கங்களில் நடிக்கப்பட்டன. இவர் எழுதிய பல நூல்கள் எஸ். எஸ். எல். சி, இண்டர்மீடியட், பி. ஏ முதலிய வகுப்புக்களுக்குப் பன்முறை பாடப்புத்தகமாக வைக்கப்பட்டன. மற்றும் தேசிங்குராசன், சனகன் என்னும் நூல்களையும் வெளியிட்டார்.

பத்திரிகாசிரியர்

நமச்சிவாயர் காலத்தில் பத்திரிகைகள் மிகச்சிலவே வெளிவந்தன. நமச்சிவாயர் பள்ளியாசிரியர்கட்குப் பயன்படும் வகையில் "நல்லாசிரியன்" என்னும் பத்திரிகையைப் பதினைந்து ஆண்டுகள் வரையில் நடத்தினர்.

பதிப்பாசிரியர்

'தமிழ்நூல்களை நல்லதாளில் உயர்ந்தமுறையில் ஆங்கிலவெளியீடுகளைப்போல வெளியிடவேண்டும்' என்

னும் அவர் நமச்சிவாயருக்கு மிகுதியாக இருந்தது. நீதி நூல்கள் பலவற்றையும் தொல்காப்பியப் பகுதிகள் சில வற்றையும் தஞ்சைவாணன்கோவை, தணிகைப்புராணம் ஆகியவைகளையும் அம்முறையிற் பதிப்பித்துத் தம் எண் ணத்தை நிறைவேற்றிக்கொண்டார்.

நமச்சிவாயரின் நல்லியல்புகள்

நமச்சிவாயரிடம் நல்லியல்புகள் பல குடிகொண்டிருந் தன. இளமைக்காலத்தில் வறுமையின் கொடுமையை நன்குணர்ந்தவராதலின் வறுமையுற்றுத் தம்பால் வந்த புலவர்கட்கும், பிறருக்கும் தம்மால் இயன்ற உதவியைச் செய்தார். பிறர்க்குதவி செய்வதற்கு முதலியார் எந்தக் காலத்திலும் பின்வாங்கியதில்லை. நமச்சிவாயரின் நூல் களைத் தம் பள்ளியில் பாடப்புத்தகமாக வைக்கக்கூடாது என்று தடுத்துவிட்ட ஓராசிரியர் பிறகு நமச்சிவாயரிடம் ஒருதவியை நாடிச் செல்லும்படியாக நேரிட்டுவிட்டது. முன் பகைவராயிருந்த ஆசிரியர் தம் வீடுதேடிவந்து உதவியை எதிர்பார்த்தபோது நமச்சிவாயர் அந் நண்பரின் எண்ணத்தை நிறைவேற்றியனுப்பியதுடன் அவருக்கு நல் விருந்தும் செய்தார். "இன்னாசெய்தாரை ஒறுத்தல் அவர் நாண, நன்னயஞ் செய்து விடல்," என்னும் தமிழ் மறையைக் கடைப்பிடித்தே நமச்சிவாயர் இவ்வாறு செய் தார் போலும். நமசிவாயரின் நல்லுதவியைப்பெற்ற அப் பகைநண்பர் நமச்சிவாயரின் பெருந்தன்மைக்கும் தமது சிறுசெயலுக்கும் உள்ளம் நாணி மனம் மிகவும் வருந்திச் சென்றார்.

நமச்சிவாயர் வறுமையால் வாடிய காலத்தில் நாள் தோறும் கடற்கரைச் சாலைவழியாகச் செல்வாராம். ஓர் இடம் அவருடைய உள்ளத்திற்கு மிகுந்த மகிழ்ச்சியை அளித்ததாம். அப்போது அவர், "நாம் சிறிது கிற்றும்

மூங்கில் மரங்களும் வாங்கி இந்த இடத்தில் ஒரு கொட்டகையைப் போட்டுக்கொண்டிருந்தாலும் போதுமே. கடற்காற்றை வாங்கி எவ்வளவோ மகிழ்ச்சியை அடையலாமே," என்று வெளிப்படையாகவே கூறி ஏங்குவாராம். பிறகு செல்வவளம் அதிகரிக்கப்பெற்ற காலத்தில் நமச்சிவாயர் முன்பு தாம் பேரவாக்கொண்ட அதே இடத்தில் அழகிய மாளிகை ஒன்றை அமைத்து அதற்குக் 'கடலகம்' என்று பெயரிட்டு அவ்வீட்டிற் குடிபுகுந்து இன்பமடைந்தார். கோடை காலத்திற்சென்று தங்குதற்பொருட்டு நீலகிரியில் ஓர் அழகிய வீட்டை அமைத்து அதற்குக் 'குறிஞ்சி வீடு' என்று பெயரிட்டார். நீலகிரியில் தங்கியபோது அவ்விடத்திய மலைவளம் குறிஞ்சிநிலமக்களின் வரலாறு முதலியவைகளை ஆராய்ந்து சென்னையிற் சில சொற்பொழிவுகள் செய்தார்.

### கருங்கல்லும் நாற்காலியும்

ஒரு நாள் நமச்சிவாயரைப் பார்க்கச் சில நண்பர்கள் சென்றனர். நமச்சிவாயரின் கட்டளைப்படி எல்லோரும் நாற்காலிகளில் அமர்ந்தனர். ஓர் அன்பர் நமச்சிவாயருக்கு முன்னால் நாற்காலியில் அமரத் துணியாமல் கீழே கருங்கல் தரையில் அமர்ந்தார். உடனே நமச்சிவாயர், "நாற்காலியை விடக் கருங்கல் விலையேறப்பெற்றது. மலையிலிருந்து பெரு முயற்சியினால் வந்தது. ஆகவே, அதன் பெருமையை உணர்ந்துதான் அவர் தமக்கு மட்டும் விலையுயர்ந்த அரிய இருக்கையைத் தேடிக்கொண்டார் போலும்," என்று கூறினார். இதனைக்கேட்டு அங்கிருந்தவர்கள் யாவரும் மகிழ்ந்தனர்.

### சிறப்பியல்பு

தமிழ் கற்றவர்களை வறுமைப்பேய் பற்றிக்கொள்வது வழக்கம். ஆனால், முதலியார் வறுமைப்பேயை விரட்டி

யடித்துவிட்டார். அவர் எழுதிய பாடப்புத்தகங்கள் அவருக்கு மிகுதியான செல்வச்சிறப்பை யளித்தபடியால் அழகிய மோட்டார்க்கார் வீடு வாசல் முதலியவைகளை மனம்போற் பெற்றுச் சிறப்பான வாழ்க்கையை நடத்தினர். "நமச்சிவாயர் ஒருவராவது திருமகளின் அருளுக்குரியவரானரே; அஃது ஒன்றே போதும்," என்று தமிழறிஞர்கள் பெரிதும் மனமகிழ்ந்தனர். நமச்சிவாயர் தமிழ்த் தாய்க்குச் செய்த திருத்தொண்டுகளும் பல. அவரால் தமிழ்த்தாய் பல சிறப்புக்களைப்பெற்று இன்று உயர்ந்த நிலையில் விளங்குகிருள் என்று கூறுவது மிகையாகாது.

இறுதி

1937-ஆம் ஆண்டில் நமச்சிவாயரை நோய் ஒன்று பற்றியது. அதனல் அவர் அவ்வாண்டில் தானே தமது அறுபத்தோராம் அகவையில், முருகன் திருவடி நீழலை யடைந்தார். அவருடைய மனைவிமக்கள் இன்று நலமுடன் வாழ்கின்றனர்.

எழுதியனவும் பதிப்பித்தனவுமான நூல்கள்

1. சீசகன்
2. பிருதிவிராசன்
3. தேசிங்குராசன்
4. சனகன்
5. ஆத்திசூடி முதலியன
6. தொல் பொருள் இளம்பூரணம்
7. தணிகைப் புராணம்
8. தஞ்சைவாணன் கோவை
9. இறையனர் களவியல்
10. தணிகைத் தவப்பயன் மாலை

என்னும் இவைகளும் வேறு சிலவுமாம்.

# ௧0. சொக்கலிங்கச் செட்டியார்

தோற்றம்

செட்டிமார்நாட்டிலே காரைக்குடியிலே கலி 4950-க்குச் சரியான நளஆண்டு ஆடித்திங்கள் 23-ஆம் நாள் சொக்கலிங்கச் செட்டியார் பிறந்தார். செட்டியாரின் தந்தையார்பெயர் இராமநாதச்செட்டியார். தாயார் பெயர் முத்துக்கருப்பியாச்சியார்.

கல்விப்பயிற்சி

சொக்கலிங்கம் என்று பெயரிடப்பெற்ற செட்டியார் குலவழக்கத்திற்குத் தக்கவாறு கல்விப்பயிற்சிசெய்து வைக்கப்பெற்றார். சின்னாள் பள்ளியிற்கற்றுப் பள்ளிக் கல்விக்குப் புள்ளிவைத்தார். பிறகு தாமே இலக்கண இலக்கியங்களையும், புராணங்களையும், தேவாரம் திருவாசகம் முதலிய நூல்களையுங் கற்கத்தொடங்கினார். முற்பிறவியின் நல்வினையினால் நல்லோர் கூட்டுறவு செட்டியார்க்கு இயற்கையாகவே உண்டாயிற்று. தொழில்வளர்ச்சியை முன்னிட்டுச் செட்டியார் தமது பதினேழாம் ஆண்டிலே யாழ்ப்பாணம் சென்றார். அப்பொழுது அங்கு ஆறுமுக நாவலர் சிறந்த கல்விமானாகச் சீர்த்திபெற்றுத் திகழ்ந் தமையை அறிந்தார். அவருடைய பழக்கத்தை ஏற்படுத்திக் கொண்டு அவரிடம் பலநூல்களைப் பாடங்கேட்டார். நாவலர் அவர்கள் தாம் பாடஞ்சொன்னதோடன்றித் தம் மருகர் பொன்னம்பலம்பிள்ளையவர்களைக் கொண்டும் பல நூல்களைப் பாடஞ்சொல்வித்தார். செட்டியாரின் கல்வித் திறமையையும், ஊக்கத்தையுங் கண்ட நாவலர் இவரிடம் சிறப்பான உரிமை பாராட்டினார். நாவலர் அவர்களின் அன்புடைமையையும் பண்புடைமையையுங்கண்ட செட்டியார்

'ஆறுமுகநாவலர் குருத்துதி' என்னும் நூலால் நாவலரைப் புகழ்ந்துபாடினார்.

செட்டியார் இலங்கையைவிட்டு இந்தியாவுக்கு மீண்ட பின் மேலும் பல நூல்களைப் பயில விரும்பினார். தேவ கோட்டை என்னும் ஊரில் நாராயணன்செட்டியார் என்பவர், மகாவித்துவான் மீனா[illegible]ள்ளையவர்களிடத்தில் கல்விகற்ற சிறப்புடையவராகவும் வன் தொண்டர் என்று புகழ்பெற்றவராகவும் விளங்கினார். வன்தொண்டருடைய கல்விமாட்சியை உணர்ந்த சொக்க லிங்கச் செட்டியார் மேற்படியாரிடமும் பல நூல்களைக் கற்றார். வன்தொண்டர் மீது 'வன்தொண்டர் குருத்துதி' என்னும் நூலினைப்பாடி வணங்கினார். மற்றும் மெய்யப்ப சுவாமிகள் என்னும் பெரியாரிடத்திலும் பல நூல்களைக் கற்றுணர்ந்தார்.

திருமணமும் திருப்பணிகளும்

செட்டியாருடைய பதினாறாவது அகவையில் முதல் திருமணம் நடைபெற்றது. இருபத்தெட்டாவது அகவை யில் முதல்மனைவியார் காலமாகவே இருபத்தொன்பதாவது அகவையில் இரண்டாவது திருமணம் நடைபெற்றது. நாற்பத்துநான்காம் அகவையில் இரண்டாவது மனைவி யாரும் காலமாகவே அதன்பின் செட்டியார் தூய துறவற வாழ்க்கையை மேற்கொண்டொழுகினார்.

திருநல்லூர்ப்பெருமணம் என்னும் ஆச்சாபுரத்தில் தம் உறவினர்களைக் கொண்டு குருபூசைமடம் ஏற்படுத்தி அறுபத்துமூவர் குருபூசைகளையும் நடத்தச் செய்தார். மேலும் அங்குத் தேவார பாடசாலையை ஏற்படுத்தி அதில் மாணவர்கட்குத் தேவாரங் கற்பிக்கச் செய்ததுடன் சைவ

நூல்களையும் இலக்கண இலக்கியங்களையும் தாமே மாணவர்கட்குப் போதித்துக்கொண்டும் இருந்தார். திருஞான சம்பந்தர்மீது பிள்ளைத்தமிழ் பாடி அரங்கேற்றஞ் செய்தார். மேலும் நகரத்தார்களைக் கொண்டு, ஆகம பாடசாலை, வேத பாடசாலை, பசுமடம், பூம்பொழில், திருஞானசம்பந்தர் திருக்கோயில் திருவிழா மண்டபம் முதலிய திருப்பணிகளை இயற்றுவித்தார்.

### மெய்கண்ட சித்தாந்த வித்தியாசாலை

பிறகு செட்டியார் திருத்தில்லையை அடைந்து அங்கு தங்கிக் கூத்தப்பிரானைப் போற்றிக்கொண்டு காலங்கழிக்க எண்ணினார். பல அன்பர்களின் உதவியைக்கொண்டு மெய்கண்ட சித்தாந்த வித்தியாசாலை என்னும் பெயருடன் வித்தியாசாலை ஒன்றை ஏற்படுத்தினார். தக்க ஆசிரியர்களைக்கொண்டு மாணவர்கட்குச் சைவசித்தாந்த நூல்களையும், இலக்கண இலக்கியங்களையும் போதிக்கச்செய்தார். தாமும் அங்கிருந்து கொண்டு மாணவர்கட்குப் பல நூல்களைப் போதித்தார். சிவபூசையிலும் கூத்தப்பிரான் வழிபாட்டிலும் முழுக்கருத்தையுஞ் செலுத்தினார்.

### சைவப்பற்று

செட்டியார் சைவத்திலே அழுத்தமான பற்றுடையவர். சைவத்தின் பெருமையைப் பற்றியும் சைவசித்தாந்தத்தின் சிறப்பைப்பற்றியும் எண்ணற்ற சொற்பொழிவுகளைச் செய்தார். காரைக்குடியில் தோன்றிய சிவநேசத் திருக்கூட்டம் செட்டியாருடைய தலைமையையும் சொற்பொழிவையும் நன்கு பெற்று வளர்ச்சியடைந்தது. அளவு கடந்த சைவப்பற்றினால் வேதாந்தம் முதலிய பிற சமயங்களைச் செட்டியார் தாக்கி எழுதி வம்புக்குள்ளானதும்

உண்டு. செட்டியாருடைய சொற்பொழிவு கேட்பாருள்ளத்தே பசுமரத்தாணிபோல் பதியும் தன்மையுடையதாகவும் சைவச்சிறப்புடையதாகவும் விளங்கியது. பெரியபுராணம் முதலிய சைவநூல்களைப் பாடஞ் சொல்வதினும் அவைகளைப்பற்றிச் சொற்பொழிவு செய்வதினும் செட்டியார் கைதேர்ந்தவர்.

இறுதி

செட்டியார் புதுப்பாடல்களை இயற்றும்விரைவு மனப்பாடஞ் செய்த பழம்பாடல்களைத் திருப்பிச் சொல்வது போல் இருக்கும். வாழ்நாள் முழுவதினும் படிப்பதினும் சிவபூசை செய்வதினும் நூல்கள் இயற்றுவதினுமே காலத்தைச் செலவிட்ட செட்டியார் சிறிதும் பெரிதுமான பல நூல்களை இயற்றினர். மெய்கண்ட சித்தாந்த வித்தியாசாலையின் வளர்ச்சிகருதிக் காரையம்பதி சென்ற செட்டியார் அவ்விடமே பிரமோதூத ஆண்டு கார்த்திகைத் திங்கள் 28-ஆம் நாள் தமது 74-ஆவது அகவையில் சிவபெருமானுடைய திருவடி நீழலை யடைந்தார். செட்டியாருடைய பூதவுடல் அவருடைய கட்டளைப்படி தீக்கடவுளுக்கு இரையாக்கப்பட்டது.

செட்டியார் இயற்றிய நூல்கள்

1. திருவுசாத்தானபுராணம்
2. திருவுசாத்தானபுராண வசனம்
3. திருப்புத்தூர்ப் புராணம்
4. பெருந்தோட்டத்து அத்தீச்சரபுராணம்
5. சோழபுரபுராணம்
6. சித்தவடமான்மியம்
7. தில்லைவனாகமான்மியம்
8. திருக்கழுக்குன்றமான்மியம்
9. திருவாதவூரடிகள்புராண வசனம்

10. திருத்தொண்டர்புராணசார விளக்கம்
11. சிவசுந்தரசாயாரூப சிவமகிமா சங்கிரகம்
12. உண்மைநாயன்மார் மகிமை
13. சேக்கிழார்புராணவசனம்
14. நம்பியாண்டார் சரித்திரம்
15. மெய்கண்ட சிவசரித்திரம்
16. மகுட தன வைசியமரபு விளக்கம்
17. சோமசுந்தரமாலை
18. சவுந்தரேசதயாநிதி மாலை
19. குமரநாயக மாலை
20. வீரசேகர மாமணிமாலை
21. சிற்சபேசர் விண்ணப்பமாலை
22. வடிவழகி நவமணிமாலை
23. கற்பக விநாயகர் பதிற்றுப்பத்தந்தாதி
24. திருவாரூர்த் திரிபந்தாதி
25. திருவாலவாய் யமகவந்தாதி
26. பசுவந்தனை வெண்பாவந்தாதி
27. குன்றைச் சிலேடை வெண்பா
28. ஞானசம்பந்தர் சிலேடை வெண்பா
29. சிவகாமசுந்தரர் சிலேடை வெண்பா
30. ஞானசம்பந்தர் போற்றிக்கலிவெண்பா
31. சிவகாமி பிள்ளைத்தமிழ்
32. திருஞானசம்பந்தர் பிள்ளைத்தமிழ்
33. திருநாவுக்கரசர் பிள்ளைத்தமிழ்
34. சுந்தரமூர்த்தி பிள்ளைத்தமிழ்
35. மாணிக்கவாசகர் பிள்ளைத்தமிழ்
36. மயின்மலைச் சந்தவிருத்தம்
37. மீனாட்சி சுந்தரேசர் திருவூசல்
38. பசுவந்தனைத் திருவூசல்
39. திருஞானசம்பந்தர் திருவூசல்
40. வள்ளிமணவாளர் திருவூசல்
41. சிவநாம வணக்கம்
42. சிவபக்த நாமாவளி
43. அருச்சனைப்பத்து

44. தூர்வை யாசகப்படலம்
45. வேதாந்தத் தெளிவு
46. சிவஞானபோதார்த்த லெகுவசனம்
47. சைவசமய உண்மை
48. வேதசிவாகமங்கள்
49. மெய்ம்மைவிளக்கம்
50. முத்தலநாயக மும்மணிக்கோவை
51. சாக்கை இரட்டைமணிமாலை

மற்றும் பல உரைநடை நூல்களும் பதிகங்களுஞ் சேர்ந்து 108 வரை உள்ளன. இவற்றிற் பெரும்பான்மையானவை செட்டியாரவர்களாலேயே நகரத்தார் பொருளுதவி கொண்டு பதிப்பித்து வெளியிடப்பெற்றுள்ளன.

## கக. ஞானியார் அடிகள்

### தோற்றம்

ஞானியார் அடிகள் என்று பெயர்பெற்ற திருப்பாதிரிப்புலியூர் சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள் சோழ வளநாட்டிலே திருநாகேச்சுரம் என்னுஞ் சிவப்பதியிலே 17-5-1873-க்குச் சரியான சிரீமுக ஆண்டு வைகாசித் திங்கள் நான்காம்நாள் தோன்றினர். அடிகளின் தந்தையார்பெயர் அண்ணாமலையையர். தாயார்பெயர் பார்வதியம்மையார். அடிகள் தோன்றிய குலம் வீரசைவ மரபு. அடிகளார் பழநி என்று பெயரிடப் பெற்று வளர்ந்தனர்.

### புலமையடைதல்

அண்ணாமலையையரின் குடும்பத்தினர் திருப்பாதிரிப் புலியூர் ஞானியார்மடாலயத் தொடர்புடையவர்களாக இருந்தனர். அந் நாளில் நான்காந் தலைவராக எழுந்தருளியிருந்த சிவசண்முக பரசிவமெய்ஞ்ஞான சிவாசாரிய

அடிகள் என்பவர் தமக்கு உதவியாக அங்கே வந்து தங்குமாறு அண்ணுமலைஐயரை அழைத்தார். அண்ணுமலை ஐயர் ஆறு திங்களே நிரம்பப் பெற்ற தம் குழந்தை பழநி யுடனும் குடும்பத்துடனும் புலிசையை அடைந்து அங்குத் தங்கினுர்.

கல்வி

அடிகளார் குழவிப்பருவத்தைக் கடந்து கல்விகற்கத் தக்க பருவத்தை அடைந்தார். மடத்தலைவராகிய அடிகளார், பழநியின் கல்வியில் கருத்துச் செலுத்தினுர். சென்ன கேசவலு நாயுடு என்பவரைக் கொண்டு முதலில் தெலுங்கு மொழியைக் கற்பித்தார். பிறகு தமிழ், ஆங்கிலம் முதலியவைகளைப் பாடசாலையில் சேர்ந்து பயிலச்செய்தார். பழநி கல்வியிற் கண்ணுங் கருத்துமாக இருந்து தகுந்தவாறு பயின்றுர். 1884-ஆம் ஆண்டில், செயின்ட் ஜோசப் பிராஞ்சு உயர்நிலைப்பள்ளியில் சேர்ந்தார். தெய்வசிகாமணி ஐயர் என்பவரிடம் தமிழ் பயின்றுர். கோவிந்தாசாரியார் என்பவரிடம் வடமொழி கற்றுர். ஆதீனத்தலைவராகிய அடிகளாரும் ஆதீனத்தொடர்பான நூல்களையும், வீரசைவ மரபுக்குரிய நூல்களையும் இடையிடையே போதித்தார்.

1889-ஆம் ஆண்டில் பழநி, பிரீ மெட்ரிகுலேஷன் வகுப்பில் கல்விபயின்று கொண்டிருந்தார். அதுகாலை ஆதீனத் தலைவராகிய அடிகளார்க்கு உடல்நலம் குன்றியது. பழநிக்குத் துறவுநிலையை வழங்கி மடத்தலைவராக்கினுர். அது முதல் பழநிக்கு, "சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய அடிகள்" என்னும் பெயர் ஏற்பட்டது. ஆதீனத் தலைவராகிய அடிகளார் இறைவன் திருவடிநீழலை எய்தினுர். அதன்பின் அடிகளார் மடத்திலேயே தங்கிக் கல்வி பயின்றுர். சி. மு. சாமிநாத ஐயர் என்பவர் தமிழாசிரிய

ராக அமர்ந்து இலக்கிய நூல்களையும் இலக்கண நூல்களையும் அடிகளார்க்கு நன்கு போதித்தார். ஐயர் பாடங்கற்பிக்கும் ஆற்றலிற் சிறந்தவராக விளங்கியபடியினால்தான் ஞானியார் அடிகளின் பெயர் திக்கெலாம் பரவியது.

பாட்டும் பயனும்

ஐயர் நாள்தோறும் ஒரு செய்யுளை எழுதி, அதனைச் சீர், தளை பிரித்து அலகிட்டு இலக்கணக் குறிப்பு முதலியன எழுதி வைக்குமாறு சொல்வது வழக்கம். ஒருநாள் மாலையில் ஐயர் வீட்டிற்குச் செல்லும்போது,

“நற்பா டலிபுரத்து நாதனே நாயினேன்
பொற்பாம் நினதடியைப் போற்றினேன்—தற்போது
வேண்டுஞ் செலவிற்கு வெண்பொற்கா சுப்பத்து
ஈண்டு தருக விசைந்து”

என்னுஞ் செய்யுளைக் குறிப்புப்புத்தகத்தில் எழுதி வைத்துவிட்டுச் சென்றார். அடிகளார் வழக்கம்போல் அந்தக் குறிப்புப் புத்தகத்தை எடுத்துப் பார்த்தார். செய்யுளைப் பதம்பிரித்து அலகிட்டு இலக்கணக்குறிப்பும் எழுதி வைத்தார். பாட்டின் கருத்து அடிகளாரின் உள்ளத்தில் பல எண்ணங்களை எழுப்பிற்று. பத்துரூபா நோட்டு ஒன்றையும் அதனோடு சேர்த்து வைத்தார்.

பாடஞ் சொல்லவந்த ஐயர் குறிப்புப் புத்தகத்தை எடுத்துப் பார்த்தார். பத்துரூபா நோட்டையுங் கண்டார்; அடிகளாரைப் பார்த்து, “நோட்டு வைத்திருக்கிறீர்களே எதற்கு?” என்றார். அடிகளார், “பாட்டிற்கு நோட்டு வைத்திருக்கிறேன்” என்றார். “பாட்டின் கருத்தை நோக்கியா இப்படிச் செய்தீர்கள்? நான்பாட்டிற்கு (என் மனம் போனபடிக்கு) எழுதிவைத்து விட்டுப்போனேனே யல்லாமல் வேறொரு நோக்கமும் இல்லை,” என்றார். அடிகளார்,

"நான் தங்கள் பாட்டிற்காகத்தான் பொருள் வைத்தேன்," என்றார். ஐயர் மகிழ்ச்சியோடு அந்த நோட்டை எடுத்துக் கொண்டார்.

அடிகளார் தெலுங்குமொழியை நான்கு ஆண்டுகளும், ஆங்கிலத்தை ஏழு ஆண்டுகளும், வடமொழி தென்மொழியாகியவைகளைப் பதினறுயாண்டுகளும் கற்றுத் தெளிந்தனர் என்ப. பேச்சுவழக்குத்தமிழ் அடிகளாருக்கு வெறுப்பை விளைவித்தது. தாமே திருத்தமாகப் பேசத் தொடங்கியதுடன் தம்மிடம் பழகுபவர்களையும் திருத்தமாகப் பேசப் பழக்கினர். இதனால், அடிகளாரின் உரை அழகிய உரைநடையாக மாறியது.

அடிகளார் முயற்சியால் தமிழ்ச்சங்கம்

தமிழ்வளர்ச்சிக்கு ஏதேனும் தக்கவழி செய்ய வேண்டுமென்று அடிகளார் எண்ணமிட்டுக் கொண்டிருந்தனர். 1899-ஆம் ஆண்டின் முடிவில் பாலவநத்தம பெருநிலக்கிழவரான பாண்டித்துரைத்தேவர் சென்னைக்குப் போய்விட்டுத் திரும்பினர். திருப்பாதிரிப்புலியூரில் இறங்கிச் சிவவழிபாடு செய்தார். ஞானியார் அடிகளின் கல்விப் பெருமை பாண்டித்துரைத்தேவர்க்கு எட்டியது. மடத்திற்குச் சென்று அடிகளாரைக் கண்டு உரையாடினர். அன்று மாலையில் பாண்டித்துரைத்தேவர் தலைமையில் அடிகளார், "தமிழின் தற்காலநிலை" என்பதுபற்றிச் சொற்பொழிவு ஒன்று செய்தார். மதுரையிற் செல்வர்கள் பலர் ஒன்று சேர்ந்து தமிழ்ச்சங்கம் ஒன்றை ஏற்படுத்தி அதன் மூலம் தமிழ்வளர்ச்சிக்கு ஏற்பாடு செய்யவேண்டும் என்று கூறினர். பாண்டித்துரைத்தேவர் தமது முடிவுரையில் ஆவன செய்வதாக அறிவித்துச் சென்றார். அவர் தம் உடன்பிறந்தாராகிய பாஸ்கரசேதுபதியிடம் அடிகளாரின்

கல்விச் சிறப்பையும், நோக்கத்தையும் தெரியப்படுத்தினர். பாஸ்கர சேதுபதி திருவருணை சென்று திரும்பியபோது புலிசையில் இறங்கி அடிகளாரைக் கண்டு உரையாடினர். சேதுபதியவர்கள் தலைமையில் அடிகளார் அன்றும் ஒரு சொற்பொழிவு செய்தார். அடிகளார் சொற்பொழிவு சேதுபதியைப் பெரிதுங் கவர்ந்தது. தமிழ்ச்சங்கம் ஒன்றை மதுரையில் ஏற்படுத்துவதாகச் சேதுபதி வாக்களித்துச் சென்றார்.

பின்னர், பாண்டித்துரைத்தேவர் அவர்களால் 1901-ஆம் ஆண்டில் மதுரைத் தமிழ்ச்சங்கம் ஏற்படுத்தப் பட்டது. அதன் உறுப்பாகச், "சேதுபதி கலாசாலை" என்னும் பெயருடன் கலாசாலை ஒன்றும் ஏற்படுத்தப்பட்டது. அதற்குச் சேதுபதியரசர் பொருளுதவி புரிந்தார். அக் கலாசாலையில் பிரவேச வகுப்பு, பால பண்டித வகுப்பு, பண்டித வகுப்பு என்று மூன்று வகுப்புக்கள் அமைக்கப் பெற்றன. சங்கத்தில் இருந்து "செந்தமிழ்" என்னும் பெயருடன் திங்கள் வெளியீடு ஒன்றுந் தொடங்கப்பெற்றது.

செந்தமிழ்த் தொண்டு

அடிகளார் நாட்டிலே தமிழ்க்கல்வி சிறந்தோங்க வேண்டுமென்று பேரார்வங் கொண்டனர். தமது மடத்திலேயே "வாணிவிலாச சபை" என்னும் பெயருடன் கழகம் ஒன்றை 1903-ஆம் ஆண்டில் ஏற்படுத்தினர். பின்பு 1905-ஆம் ஆண்டில் சைவசித்தாந்த மகா சமாசத்தையும் தமது மடத்தின் ஆதரவிலேயே தொடங்கிவைத்தனர். சமாசம் செய்யவேண்டிய கடமைகளையும் தெளிவாக எடுத்துரைத்தார். அடிகளாரின் செந்தமிழ்ப்புலமையையும், சொல்லாற்றலையும் நன்குணர்ந்த பலர் அடிகளாரிடம் கல்வி கற்கத் தொடங்கினர். அடிகள், மாணவர்களின் தன்

மையை நன்குணர்ந்து அவர்கட்குப் பொருள்விளங்கத் தக்க முறையில் விரிவுரையாற்றித் தெளிவாகப் போதித்தனர். இதனால் அடிகளாரிடம் கல்வி கற்ற மாணவர்களுஞ் சிறப்படைந்து பேரும் புகழும் பெரிதும் விளங்கப் பெற்றனர். திருக்கோவலூரையடுத்த மணம்பூண்டி ம. ரா. குமாரசாமிப்பிள்ளை என்பவர் அடிகளாரின் மாணவர்களுள் தலைசிறந்தவராக விளங்கினர். அடிகளாரின் மாணவர்கள் பலரும் தத்தம் ஊர்களில் கழகம் முதலியவைகளை ஏற்படுத்தித் தமிழ்த்தொண்டுபுரிதலை மேற்கொண்டனர். குமாரசாமிப்பிள்ளை அடிகளாரின் மடத்திலேயே "ஞானியார் மாணவர் கழகம்" எனப் பெயரிய கழகம் ஒன்றையும் அமைத்துச் சொற்பொழிவுகள், ஆண்டுவிழாக்கள் முதலியன நடத்தினர். அக்கழகத்தில் பலர் உறுப்பினர்களாயினர்.

### பணியாளின் மடமை

அடிகளாரின் பெருமை யாண்டும் பரவியபடியால் பெருஞ் செல்வர்களும், அரசாங்க அலுவலாளர்களும் அடிகளாரின் அன்பர்களாயினர். எல்லோரும் அடிகளாரிடம் அடிமைகள் போலவே நடந்துகொள்வர். அடிகளார்க்கு அன்பராக ஓர் ரெட்டியார் இருந்தார். அவருக்கு உரிமையான பலாமரம் ஒன்றில் இருந்து ஒரு பெரிய பலாப் பழத்தை அடிகளார்க்கு அனுப்ப எண்ணினர். ஓர் பணியாளிடம் கடிதமும் பலாப்பழமுங் கொடுத்து, "இந்தப் பலாப் பழத்தை அடிகளாரிடஞ் சேர்ப்பித்துவிட்டு வா," என்று சொல்லியனுப்பினர். அந்த ஆள் உலகறிலை தெரியாதவன். அவன் பலாப்பழத்தைத் தூக்கிக்கொண்டு மடத்திற்கு வந்து சேர்ந்தான். அடிகளாரிடம் கடிதத்தையும், பழத்தையுஞ் சேர்த்தான். பிறகு வாயாடத் தொடங்கினன். அவன்

அடிகளாரைப் பார்த்து, "என்னுங்க சாமி! இந்தப் பெரும் பண்ணியை என்னுலே தூக்கிக்கிட்டு வர முடியலிங்க," என்று கூறினன். அடிகளார், "பண்ணியா எந்தப் பண்ணியை?" என்று உசாவினர். பணியாள் பலாப்பழத்தைச் சுட்டிக் காட்டி, "இந்தப் பண்ணியைத் தானுங்க சொல்லுறேன். இல்லாட்டா இம்புட்டுக்கனம் இருக்குங்களா?" என்றான்.

பலாப்பழத்தைப் பன்றி என்று அந்த ஆள் கூறிய பிறகு அதனை ஏற்றுக்கொள்வதற்கு அடிகளாரின் மனம் ஒப்பவில்லை. 'ரெட்டியார் இத்தகைய மூடர்களேயும் நம்மிடம் அனுப்புகிறார் அன்றோ? அவருக்கு அறிவுறுத்த வேண்டும்,' என்று எண்ணினர். அந்த ஆளுக்கு உணவிடச் செய்தார். சிறிது பொருளுங் கொடுத்தார். அவனைப் பார்த்து, "இந்தப் பழத்தைத் திரும்ப நீயே தூக்கிக்கொண்டு போய் ரெட்டியாரிடம் சேர்த்துவிடு," என்று இயம்பினர். "ஏன் சாமி?" என்று கேட்டான் அந்த ஆள். அதற்குள் அடிகளார், "நீ கொண்டுவந்த பன்றியைக் கடவுளுக்குப் படைப்பதற்குக் கண்ணப்ப நாயனர் போன்ற பக்குவநிலை இன்னும் எங்கட்கு ஏற்படவில்லை," என்று சொல்லித் திருப்பி விட்டார். ஆகவே, அவனே அந்தப் பலாப்பழத்தைத் திரும்பவுந் தூக்கிக்கொண்டுபோய் ரெட்டியாரிடஞ் சேர்த்து நடந்த செய்தியையுங் கூறினன். ரெட்டியார் மறுநாள் வேறு இரண்டு மூன்று பலாப்பழங்களை வண்டியில் ஏற்றிக்கொண்டு அடிகளாரிடம் வந்தார். வேலையாள் மடமையால் கூறியவைகளைப் பொறுத்தருளுமாறு வேண்டிக்கொண்டார். இந் நிகழ்ச்சியை அறிந்தவர்கள் அடிகளாரிடம் மிகு விழிப்புடன் நடந்துகொள்ளலாயினர்.

பட்டதாரியின் மடமை

நாட்டுக்கோட்டை செட்டியார் ஒருவருடைய முயற்சியால் அடிகளாரின் மேற்பார்வையில் "ஸ்ரீபாடலேசுரர் தரும பாடசாலை" என்னும் பெயருடன் பாடசாலை ஒன்று தொடங்கப்பட்டது. அப் பாடசாலையில் எம். ஏ., எல். டி. பயின்ற ஆசிரியர் ஒருவர் தலைமைஆசிரியராக அமர்த்தப் பெற்றார். அவர் அடிகளாரிடம் வந்து திங்கள் ஊதியம் பெறுதலைச் சிறுமையாகத் தம் மடமையால் எண்ணினார். அடிகளார் ஊரில் இல்லாத சமயத்தில் பாடசாலையை நடத்துஞ் செட்டியார்க்கு, "ஏராளமான பொருளை நீங்கள் இந்தப் பாடசாலையின் பொருட்டுச் செலவிடுகிறீர்கள். அவ்வாறாகவும் பாடசாலை, 'ஞானியார் பாடசாலை' என்று பெயர் விளங்குகிறது. ஞானியாரடிகளின் தொடர்பு இல்லாமல் நீங்கள் இந்தப் பாடசாலையை நடத்தினால், உங்கள் பெயர் விளங்கும். ஆகையினால் ஞானியாரடிகட்கு இப் பாடசாலையில் உள்ள தொடர்பை நீக்கி விடுவது நல்லது," என்று கடிதம் எழுதினார். இக் கடிதத்தைப் பார்த்த செட்டியார், "தமிழ்க்கல்வி சிறப்படைய வேண்டுமென்று தான் ஞானியார் அடிகளின் தலைமையில் பாடசாலையைத் தொடங்கினோம். அவர்களுடைய தொடர்பு இல்லாமல் பாடசாலையை நடத்த நாம் விரும்பவில்லை," என்று பதிலெழுதியதுடன் பொருள் அனுப்புதலையும் நிறுத்திக் கொண்டார். அடிகளார் ஊருக்குத் திரும்பி வருவதற்குள் அப் பாடசாலை நின்றுவிட்டது. ஊருக்குத் திரும்பிய அடிகள் பாடசாலை நின்றுவிட்டதைக் கண்டு உள்ளம் வருந்தினார்.

அறுபானாண்டு நிறைவு

அடிகளார் சிவிகையில் இவர்ந்து தென்னாடு முழுவதும் உள்ள பல சிவப்பதிகட்குஞ் சென்று இறைவழிபாடு

ஆற்றியதன்றி, ஒவ்வோர் ஊரிலும் சொற்பொழிவு நிகழ்த்தித் தமிழ்வளர்ச்சிக்குஞ் சமயவளர்ச்சிக்கும் பெருந்தொண்டு புரிந்தனர். சிமுக ஆண்டு வைகாசித் திங்கள் மூலநாளில் அடிகளார்க்கு அகவை அறுபது நிறைந்தது. அப் பெருநாளைத் திருநாளாகத் தமிழ்நாட்டு மக்கள் கொண்டாடினர். மகிபாலன்பட்டி பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியார் அவர்கள் தலைமையில் மணி விழா அடிகளாரின் மடாலயத்தில் நடைபெற்றது. புலவர்கள் பலரும், அன்பர்களும் அவ்விழாவுக்குப் போந்து சிறப்பித்தனர். அடிகளார் தமது மணிவிழா நாளின் நினைவுக்குறியாகக் கலாசாலை ஒன்றையும் ஏற்படுத்தினர்.

பொன்விழா

அடிகளார் பட்டம் எய்தி ஐம்பது ஆண்டுகள் நிறைந்த பொன்விழாவுஞ் சிறப்பாகக் கொண்டாடப்பெற்றது. பொன்விழாவில் டி. கே. சிதம்பரநாத முதலியார், ந. மு. வேங்கடசாமி நாட்டார், பண்டிதமணி கதிரேசச் செட்டியார் முதலிய அறிஞர்கள் கலந்து சொற்பொழிவாற்றினர்.

திரிசிரபுரம் செல்லுதல்

1941-ஆம் ஆண்டில், சைவசித்தாந்த மகாசமாசத்தின் முப்பத்தாறும் ஆண்டு நிறைவு விழா திரிசிரபுரத்தில் நடத்தப்பெற்றது. அதற்கு அடிகளார் சென்று தலைமை தாங்கினர். அறிஞர்கள் பலர் சொற்பொழிவாற்றினர். பின் திரிசிரபுரம் சைவசித்தாந்தசபைக் கூட்டம் நடைபெற்றது. அடிகளார் அக் கூட்டத்திலும் தலைமை தாங்கிச் சொற்பொழிவு செய்தனர். அடிகளாரின் அன்பர்களில் ஒருவர் வீட்டில் திருமணம் நிகழ்வதாக இருந்தது. அதன் பொருட்டு அந்த அன்பர் அடிகளாரைச் சிறிது காலம் அவ்விடமே தங்குமாறு வேண்டிக்கொண்டார். அடிகளாரும் அதற்கு இணங்கினர்.

சில நாட்களில் பழநிக்குச் சென்று முருகப்பெருமானை வணங்கிக்கொண்டு வந்துவிடலாம் என்று அடிகட்குத் தோன்றியது. உடனே அன்பர்கள் திருக்கூட்டத்துடன் பழநிக்குப் புறப்பட்டனர். அங்குச் சென்று சில நாட்கள் பழநியாண்டவனைப் போற்றிக்கொண்டு தங்கினர். அப்போது பழநிச் சைவசித்தாந்தசபையின் ஆண்டு விழாவும் அடிகளாரின் தலைமையில் சிறப்பாக நடைபெற்றது. 30-1-1942 வெள்ளிக்கிழமை அடிகளார் தண்டபாணிப் பெருமானுக்குச் சிறப்பாகப் பூசனை நடைபெறச் செய்தனர். மலைமீது ஏறி முருகனை வழிபட்டனர்.

மறுநாள் அடிகளார் திரிசிரபுரத்திற்குப் புறப்படத் தொடங்கினர். அதிகாலை மூன்றுமணிக்குச் சிவிகையிலேறித் திருக்கூட்டத்துடன் ஆய்குடி என்னும் ஊரை அடைந்தனர். தைமாதக் குளிர் அடிகளாரின் உடலை மிகுதியாகத் தாக்கிற்று. ஓரிடத்தில் சிவிகையை நிறுத்தக் கட்டளையிட்டனர். அடிகளாரின் உடல் குளிரால் கிடுகிடென்று நடுங்கியது. ஆவி எந்தக் கணத்தில் அகலுமோ என்னும் ஐயம் ஏற்பட்டுவிட்டது. அன்பர்கள் வருந்தினர். பழநிக்கு ஆள் அனுப்பப்பட்டது. அடிகளார் வெந்நீரினால் முகம் முதலியவைகளைக் கழுவிக்கொண்டு சிவிகையில் அமர்ந்து, "சண்முகா" என்று திருநீறணிந்தனர். சிறிது வெந்நீரையும் உட்கொண்டார். பிறகு அடிகளாரின் நிலை எச்செயலும் அற்ற நிலையில் காணப்பட்டது. பழநியில் இருந்து ஆங்கில மருத்துவர் விரைந்து வந்தார். அடிகளாரின் உடல்நிலையை ஆராய்ந்து பார்த்தார். அடிகளார் வீடு பேறடைந்துவிட்டதாகத் தெரியப்படுத்தினர். அதனைக் கேட்டு அன்பர் திருக்கூட்டம் கலங்கிச் சோர்ந்தது. பிறகு அடிகளாரின் உடல் அங்கிருந்து மோட்டார்காரில் 1-2-1942-இல் திருப்பாதிரிப்புலியூரில்

உள்ள திருமடத்திற்குக் கொண்டுசெல்லப்பட்டது. பிறகு அங்கு அடிகளார் உடல் சமாதி செய்யப்பட்டது.

அடிகளார் தனிநூலாக எதுவுஞ் செய்யவில்லையாயினும் அடிகளாருடைய சொற்பொழிவுகள் பல புத்தகவடிவில் வெளியிடப்பட்டுள்ளன. அடிகளார் தமிழ்வளர்ச்சிக்குச் செய்த தொண்டு பெரிதும் போற்றத்தக்கது.

## கஉ. உ. வே. சாமிநாத ஐயர்

*பிறப்பு*

"சோழவளநாடு சோறுடைத்து" என்று புலவர் பெருமக்களால் புகழ்ந்து பாராட்டப்பெற்ற சோழநாட்டிலே, தஞ்சைமாவட்டத்திலே உத்தமதானபுரம் என்னுஞ் சிற்றூரிலே உ. வே. சாமிநாதையர் பிறந்தார். ஐயரின் தந்தையார் பெயர் வேங்கடசுப்பையர். தாயார் பெயர் சரசுவதி. வேங்கடசுப்பையர் இசைப்புலவராக இருந்ததுடன் தமிழ்ப்பயிற்சி உடையவராகவும் இருந்தார். அரியலூர் உடையார்பாளையம் முதலிய இடங்களில் பெருநிலக்கிழார்களுடைய இல்லங்களில் அவர் இசைப்புலவராக இருந்தார். ஓய்வுநேரங்களில் தம்மை நாடி வந்த மாணவர்கட்கு இசையையும், தமிழ்மொழியையும் கற்பித்தார். வேங்கடசுப்பையரின் மனைவி சரசுவதியம்மாள் பத்தாவுக்கேற்ற பதிவிரதையாக இலங்கினர். இசைப்புலமை, தமிழ்கற்பித்தல், புராணச்சொற்பொழிவு முதலியவைகளின் வருவாயே வேங்கடசுப்பையரின் வாழ்க்கைக்கு உறுதுணையாக அமைந்துநின்றது. இல்வாழ்க்கையை இருவரும் நடத்திக்கொண்டிருந்தனர். 1885-ஆம் ஆண்டு பிப்ரவரித்திங்கள் பத்தொன்பதாம்

நாள் இவாகடமோா ஆணகுழநதை
குழந்தைக்கு வேங்கடராமன் என்று பெயரிட்டுக் களித்த னர். அப் பெயர் நாளடைவில் சாமிநாதன் என்று மாறி இறுதிவரையில் சாமிநாதன் என்பதே நிலைபெற்று விட்டது.

கல்வி கற்றல்

சாமிநாதையர் தம்முடைய ஐந்தாம் அகவையில் திண்ணைப் பள்ளிக்கூடம் ஒன்றில் சேர்க்கப்பட்டார். அப் பள்ளிக்கூடத்தில் உயிரெழுத்துமுதல் நிகண்டுவரையில் கற்றூர். பிறகு தம் தந்தையாரிடத்தில் சதகம் அந்தாதி இசைப்பாடல் முதலியவைகளைக் கற்றூர். அக் காலத்தில் நூல்களெல்லாம் ஓலைச்சுவடிகளாக இருந்தன. சாமிநாதையர் ஓலைச்சுவடியில் எழுத்தாணியால் எழுதுவதினும் வல்லவரானூர். திண்ணைப் பள்ளிக்கூடப் படிப்பு முடிந்த பின்பு அரியலூர்ச் சடகோபஐயங்காரிடம் தமிழ் கற்கத் தொடங்கினூர். அவரிடம் திருவரங்கத்தந்தாதி, திருவேங்கடமாலை, திருவேங்கடத்தந்தாதி முதலிய நூல்களைப் பாடங் கேட்டார். பிறகு செங்கணம் விருத்தாசல ரெட்டியார் என்பவரிடம் சில நூல்களைப் பாடங்கேட்டார். அக் காலத்திய அறிஞர்களிற் பலர் சிற்சில நூல்களை மட்டும் பாடஞ்சொல்லக் கூடியவர்களாக இருந்தார்கள். எல்லா நூல்களையும் ஒருங்கு பாடஞ்சொல்லக் கூடியவர்களைக் காண்பது அரிது. யாரிடஞ் சென்றூல் எல்லா நூல்களையும் ஒருங்கு கேட்கலாம் என்று சாமிநாதையர் எண்ணமிட்டுக் கொண்டிருந்தார். "திருவாவடுதுறை ஆதீன வித்துவானுக விளங்கும் மகாவித்துவான் மீனூட்சி சுந்தரம் பிள்ளையவர்களிடஞ் சென்றூல், நன்கு கல்வி கற்கலாம்," என்று சிலர் கூறினூர்கள். மீனூட்சிசுந்தரம் பிள்ளையவர்களிடஞ் சென்று பாடங்கேட்கத் தக்க சம

யம் எப்பொழுது வாய்க்கும் என்று எதிர்பார்த்துக்கொண்டிருந்தார்.

### மகாவித்துவானிடம் கல்விகற்றல்

சாமிநாதையருக்கு அகவை பதினேழு நடந்துகொண்டிருந்தது. ஐயரின் தந்தை வேங்கடசுப்பையர் சாமிநாதையரை மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம்பிள்ளையவர்களிடம் அழைத்துக்கொண்டு சென்றார். மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களைப் பார்த்து, "என் மைந்தனுக்குக் கல்வி கற்பித்து முன்னுக்குக் கொண்டுவரவேண்டும்," என்று வேண்டிக்கொண்டார். மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் சாமிநாதையரைத் தம் மாணவராக ஏற்றுக்கொண்டார். ஐயர் பிள்ளையவர்களை நிழல்போலத் தொடர்ந்து நூல்கள் பலவற்றைப் பாடங்கேட்கலானார். ஆசிரியர் இயற்றும் செய்யுட்களைப் பனையேட்டில் எழுதினார். ஐயருக்குஞ் செய்யுள் பாடும் ஆற்றல் அமைந்தது. ஐயர் மகாவித்துவானிடம் (பேரறிஞர்) ஆறாண்டுகள் கல்விகற்றார். கோபால கிருஷ்ண பாரதியார் என்பவரிடம் இசைப்பயிற்சியும் பெற்றார். பிள்ளையவர்கள் தாம் திருவாவடுதுறை செல்லும்போதெல்லாம் சாமிநாதையரையும் உடனழைத்துச் சென்றார். [illegible] சா[illegible] திருவாவடுதுறை ஆதீனப் பழக்கமும் உண்டாகியது.

### ஆசிரியர்வேலை

மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் காலமான பினபு திருவாவடுதுறை ஆதீனத்தலைவரிடம் சில ஆண்டுகள் கல்வி கற்றார். ஆதீனத்திற்குப் புதிதாக வந்து சேரும் தம்பிரான்கட்குப் பாடஞ் சொன்னார். கும்பகோணம் கல்லூரியில் வேலை பார்த்தவரும் மீனாட்சிசுந்தரம்பிள்ளையவர்களின் மாணவர்களிற் சிறந்தவருமான தியாகராசச் செட்டி

யாருக்கும் சாமிநாதையருக்கும் நெருங்கிய நட்புரிமை இருந்தது. தியாகராசச் செட்டியார் தாம் கல்லூரி வேலையில் இருந்து விலகியபோது சாமிநாதையருக்கு அந்த வேலை கிடைக்குமாறு செய்தார்.

ஆசிரியத் தொழிலும் நூல் வெளியீடும்

கல்லூரியில் வேலை ஏற்றுக்கொண்ட ஐயர் மாணவர்களின் உள்ளங்களை எளிதில் கவர்ந்தார். ஐயர் பாடஞ் சொல்லிய முறை மாணவர்கட்கு மனநிறைவை யளித்தது. ஐயர் கல்லூரி வேலையில் இருக்கும்போது வீட்டிலும் பலர் பல நூல்களைப் பாடங்கேட்டனர். ஐயரின் தந்தை வேங்கடசுப்பையர் குடும்பக்காரியங்களை யெல்லாம் பார்த்துக் கொண்டபடியால் வீட்டிற்கு வேண்டிய பொருள்களை வாங்கிப்போடுதல் முதலிய குடும்ப வேலை எதுவும் ஐயருக்கு ஏற்படவில்லை. ஐயர் பள்ளிக்குப் போவதும் நூல்களைப் படிப்பதுமாகக் காலத்தைப் போக்கிக் கவலையற்றிருந்தார். ஐயருடைய நல்வியல்புகளைக் கேள்வியுற்ற தக்கார்கள் சிலர் ஐயருடன் நட்புக்கொண்டார்கள். அந்நாளில் கும்பகோணம் முனிசிபாக இருந்த சேலம் இராமசாமி முதலியார், சென்னைமாகாணக் கல்லூரியில் பேராசிரியராக இருந்த பூண்டி அரங்கநாத முதலியார் என்போர்கள் அத்தகைய தக்கார்களுட் குறிப்பிடத் தக்கவர்களாவர்.

சேலம் இராமசாமி முதலியார் ஐயரிடம் சீவகசிந்தாமணியைப் பாடங்கேட்க விரும்பினர். ஒரு புத்தகத்தைக் கொண்டு வந்தார். சாமிநாதையர் அந்தப் புத்தகத்தைப் படித்துப் பார்த்தார். பிழைகள் நிறைந்திருந்தன. அப்பிழைகளை யெல்லாம் முதலியாருக்குக் காட்டினர். அத்தகைய புத்தகத்தை வைத்துக்கொண்டு படிப்பது மிகுந்த இடர்ப்பாடாக இருக்குமென்றார். இதனைக் கேட்ட முதலி

யார், "தாங்கள் இந்த நூலைத் திருத்தி அச்சுப் போடுங்கள். அச்சுப் போடுதற்காகும் செலவை நான் கொடுக்கிறேன்," என்று கூறினார். அந்தப் புத்தகத்தைத் திருத்தத் தொடங்கிய ஐயருக்குப் பலவகையான ஐயங்கள் எழுந்தன. வேறு புத்தகங்களின் உதவியில்லாமல் இதனைத் திருத்துதல் அருமையென்று கண்டார். வேறு சீவகசிந்தாமணிப் பிரதிகள் எங்குள்ளன என்று பலவிடங்களினும் தேடினார். பல பிரதிகள் ஓலைச்சுவடிகளாக அகப்பட்டன. ஒவ்வொரு பிரதியும் எழுதுவோரால் பலவாறு பிழையாக எழுதப் பெற்றிருந்தன. எல்லாச் சுவடிகளையும் ஒப்பிட்டு நோக்கவே சுத்தமான பிரதியை அமைப்பதற்கு வழி பிறந்து விட்டது. பிறகு சிந்தாமணியைச் செப்பஞ்செய்து 1887-ஆம் ஆண்டில் வெளியிட்டார். இதன் மூலம் ஐயருடைய புகழ் எங்கும் பரவத் தொடங்கியது.

பிறகு ஐயர் பத்துப்பாட்டு என்னும் நூலை அச்சிட்டு வெளியிட எண்ணினார். பல சுவடிகளைத் தேடிக்கண்டு பிடித்து ஆராய்ந்தார். அதனை ஒருவாறு ஒழுங்குசெய்து 1888-ஆம் ஆண்டில் வெளிப்படுத்தினார். இது முதல் ஐயருடைய ஊக்கம் மேலும் வளர்ந்தது. நூல்களை வெளியிடுதலையே தமது குறிக்கோளாகக் கொண்டார். 1892-ஆம் ஆண்டில் சிலப்பதிகாரத்தைப் பல சுவடிகளை வைத்து ஒப்பு நோக்கிச் செப்பஞ்செய்து வெளியிட்டார். மேலுஞ் சில ஆண்டுகளில் புறநானூற்றை வெளியிட்டார். 1898-இல் மணிமேகலை வெளிவந்தது.

சென்னையை அடைதல்

1900-ம் ஆண்டில் ஐயரின் தந்தையார் மண்ணுலக வாழ்வை நீத்து விண்ணுலகஞ் சென்றார். பல நூல்களை வெளியிட்டுப் புகழ்பெற்ற ஐயரின் பெயர் யாண்டும் பரவி

கின்றது. அரசாங்கத்தினர் 1903-ஆம் ஆண்டில் ஐயரைச் சென்னை மாகாணக் கல்லூரிக்கு மாற்றினார்கள். இருபத்து மூன்று யாண்டுகள் குடந்தையில் வேலைபார்த்த ஐயர் சென்னையை அடைந்தார்.

ஐயரின் நூல் வெளியீட்டுப் பணிகட்குச் சென்னை தகுதியுடையதாக விருந்தது. 1903-ஆம் ஆண்டில் ஐங்குறுநூறு என்னும் நூலை வெளிப்படுத்தினார். 1904-ஆம் ஆண்டில் பதிற்றுப்பத்தை வெளிப்படுத்தினார். 1918-இல் பரிபாடல் வெளியாகியது. ஐயர் திருவேட்டீசுரன் பேட்டையில் ஓர் இல்லத்தை அமைத்தார். அவ் வில்லத்திற்குத் தம் நண்பராகிய தியாகராசச் செட்டியாரின் பெயரையே இட்டுத் தியாகராச விலாசம் என்று குறிப்பிட்டார்.

சிறப்புஞ் செல்வமும்

சென்னை, அண்ணாமலைநகர், மைசூர், காசி, திருவனந்தபுரம் முதலிய இடங்களில் உள்ள பல்கலைக் கழகங்களின் தமிழ்க் குழுக்களில் ஐயர் உறுப்பினராக அமர்ந்து தமிழ்த் தொண்டுகள் செய்தார். சென்னைப் பல்கலைக் கழகத்தின் புலவர் தேர்வுக் குழுத்தலைவராகப் பல்லாண்டுகள் இருந்தார். அரசினர் ஐயரைப் பலவாறு பெருமைப்படுத்தினர். 1906-ஆம் ஆண்டில் 'மகாமகோபாத்தியாய' (பெரும்பேராசான்) என்னும் சிறப்புப்பெயரை வழங்கினர். ஆயிரம் வெண்பொற்காசுகளை நன்கொடையாக வழங்கினர். 'பாரததர்ம மகாமண்டலத்தார்' என்னும் அவையினர் 'திராவிட வித்யா பூஷணம்' என்ற பட்டப் பெயர் வழங்கினர். காஞ்சி காமகோடி பீடத்தலைவர் சங்கராச்சாரிய அடிகள் 'தாக்ஷிணாத்ய கலாநிதி' (தெற்கத்திய கலைச் செல்வன்) என்று பட்டம் வழங்கினார். சென்னைப் பல்கலைக் கழகம் 'டாக்டர்' (இலக்கியப் பேரறிஞர்) என்னும்

பட்டத்தை வழங்கியது. மதுரைத் தமிழ்ச்சங்கத்தார், ஐயாயிரம் வெண்பொற்காசுகள் கொண்ட பணமுடிப்பு ஒன்றினை வழங்கி மேன்மைப்படுத்தினர்.

1919-ஆம் ஆண்டில் ஐயர் மாகாணக் கல்லூரி அலுவலில் இருந்து விலகினர். பிறகு இராசா சர். அண்ணாமலைச் செட்டியாரின் வேண்டுகோட்படி அவருடைய கல்லூரியில் தமிழ்ப்பிரிவுத் தலைவராக மூன்றாண்டுகள் பணியாற்றினர்.

முடிவு

1935-ஆம் ஆண்டில் ஐயருக்கு அகவை எண்பது ஆகியது. ஐயரின் எண்பதாவது பிறந்தநாள் பலவிடங்களிலும் சிறப்பாகக் கொண்டாடப் பெற்றது. சென்னைப் பல்கலைக்கழகம் ஐயரின் தமிழ்த்தொண்டைப் பாராட்டித் தேநீர் விருந்தொன்றைக் கொடுத்தது. அப்போது திருப்பனந்தாள் காசி மடத்துத் தலைவர் அளித்த ஐயரின் படம் செனேட் மண்டபத்தில் திறந்துவைக்கப்பட்டது. அப்போது மூவாயிரம் வெண்பொற்காசுகள் கொண்ட பணமுடிப்பொன்றும் வழங்கப்பட்டது. மேலும், ஐயர் நூல் வெளியிடும் பணியில் நுழைந்து 1937-ஆம் ஆண்டில் குறுந்தொகை என்னும் நூலை வெளியிட்டார்.

1942-ஆம் ஆண்டில் சென்னை நகர்மீது சப்பானியர் குண்டு வீசுவர் என்று மக்கள் அஞ்சினர். பெருஞ் செல்வர்கள் வெளியூர்கட்குச் சென்று தங்கினர். அச்சமயம் ஐயர் திருக்கழுக்குன்றத்தை யடைந்து திருவாவடுதுறை ஆதீனமடத்தில் தங்கியிருந்தார். இரண்டொரு நாட்கள் மட்டும் நோயாக இருந்த அவர் தமது எண்பத் தெட்டாம் அகவையில் இறைவன் திருவடிநீழலை எய்தினர்.

ஐயர் திரட்டிவைத்திருந்த எண்ணற்ற ஓலைச்சுவடிகள் அடையாறு என்னுமிடத்தில் உள்ள பிரமஞான

சபைக்குக் கொடுக்கப்பட்டன. அங்கு வெளி வராத நூல்கள் பலவற்றை வெளிப்படுத்துவதற்கும் ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளன. ஐயருடைய பூதவுடல் மறைந்தும் புகழுடல் நிலைபெற்று விளங்குகிறது. அவர் செய்துள்ள தமிழ்த் தொண்டின் பயனும் அவர் பெயர் என்றென்றும் நிலைபெற்றுத் தமிழ்நாட்டில் விளங்குமென்பதற்குச் சிறிதும் ஐயமில்லை.

நூல்கள்

1. குறுந்தொகை உரை
2. பத்துப்பாட்டு உரை
3. ஐங்குறுநூறு உரை
4. பதிற்றுப்பத்து உரை
5. பரிபாடல் உரை
6. புறநானூறு உரை
7. சீவக சிந்தாமணி உரை
8. சிலப்பதிகாரம் உரை
9. மணிமேகலை உரை
10. தக்கயாகப்பரணி உரை
11. பாசவதைப்பரணி உரை
12. சங்கரலிங்க உலா
13. திருவாரூர்க்கோவை
14. சீகாழிக்கோவை
15. பழமலைக்கோவை
16. சிராமலைக்கோவை
17. கலைசைக்கோவை
18. சிவக்கொழுந்து தேசிகர் பிரபந்தங்கள்
19. மீனாட்சிசுந்தரம் பிள்ளை பிரபந்தத் திரட்டு
20. திருமயிலைத் திரிபந்தாதி
21. திருஇலஞ்சி முருகன் உலா
22. திருக்கழுக்குன்ற உலா
23. மதுரைச் சொக்கநாதர் உலா
24. திருப்பூவணநாதர் உலா

25. திருக்காளத்தி நாதருலா
26. கடம்பர்கோவில் உலா
27. தேவை உலா
28. மான்விடு தூது
29. தமிழ்விடு தூது
30. அழகர் கிள்ளைவிடு தூது
31. வண்டுவிடு தூது
32. சிவசிவ வெண்பா
33. திருமலையாண்டவர் குறவஞ்சி
34. மகரநெடுங்குழைக்காதர் பாமாலை
35. தனியூர்ப் புராணம்
36. நன்னூல் மயிலைநாதர் உரை
37. மதுரை மும்மணிக்கோவை
38. வலிவல மும்மணிக்கோவை
39. திருவாவடுதுறைக்கோவை

முதலிய நூல்களை அச்சிற் பதிப்பித்து வெளியிட்டதோடு,

1. புதியதும் பழையதும்
2. தமிழ்நெறி விளக்கம்
3. கல்லுரைக்கோவை—நான்கு பாகம்
4. நினைவு மஞ்சரி—இரண்டு பாகம்
5. நான் கண்டதும் கேட்டதும்
6. சங்கத்தமிழும் பிற்காலமும்
7. தியாகராயச் செட்டியார் வரலாறு
8. மீனாட்சிசுந்தரம் பிள்ளை வரலாறு
9. திருவள்ளுவரும் திருக்குறளும்
10. என் சரித்திரம்

முதலிய அரிய உரைநடைநூல்களையும் எழுதி வெளிப்படுத்தியுள்ளார்.

## கங. செந்தில்நாயக அடிகள்

### தோற்றம்

வண்ணச்சரபம் தண்டபாணி அடிகளின் திருமகனாகத் தோன்றியவர் செந்தில்நாயக அடிகளார். தோன்றிய காலம் ஆங்கிலம் 1884-க்குச் சரியான தாரணஆண்டு கார்த்திகைத்திங்கள் மூன்றும்நாள் விசாகவிண்மீன். தாயார் பெயர் சுந்தரத்தம்மையார் என்பது.

### கல்விப்பயிற்சி

செந்தில்நாயகம், அறிவாற்றல்மிக்க அருளுடைப் பெரியாரின் அருமைத் திருமகனாகத் தோன்றியமையின் சீரிய கல்விப்பேற்றைச் சிறு பருவத்திலேயே பெற்றார். செந்தில்நாயகம் ஏழாண்டுச் சிறுவராக இருக்கும்போது தந்தையாராகிய தண்டபாணிஅடிகள் செந்தில்நாயகத்தைப் பார்த்து, "நீ உன்னுடைய ஒன்பதாவது அகவையில் என்னுடைய ஏட்டுச்சுவடியைப் படித்தல் வேண்டும். இன்றேல் உன்னை என்னிடத்திலிருந்து விரட்டி விடுவேன்," என்று அச்சுறுத்தினார். செந்தில்நாயகம் அடிகளார் கட்டளைப்படி ஒன்பதாவது அகவையில் ஏட்டுச்சுவடியைப் பார்த்துப் படிக்கத்தக்க அறிவாற்றலை யடைந்தார். அதில் பழங்கால முறைப்படி ஒற்றெழுத்துக்குமேலே புள்ளியும் ரகர எழுத்துக்குமேலே கோடும் அமைப்பது வழக்கமில்லை. அடிகளாரின் ஏட்டில் அம்முறைபற்றியே எழுதப் பட்டிருக்கும். பொருள் அறிந்தவரே படிக்க இயலும். திருவாமாத்தூர்ச் சிவபிரான்மீது அடிகளால் பாடப்பெற்ற திரிபந்தாதி, ஏகபாதத்தந்தாதி ஆகியவைகளில் நாள் தோறும் ஒவ்வொரு பாடல்வீதம் அடிகள் பாட்டும் பொருளும் கூறுவார். செந்தில்நாயகம் அவைகளைத் தம் கைப்பட ஏட்டில் எழுதிக்கொள்ளுவார். இவ்வாறே

இரண்டு நூல்களும் முடிந்தன. இவைகளைக் கற்றதோடு கற்ற நாள்களில் பள்ளிக்குஞ் சென்று கல்விபயின்றார். கடவுளர்களின் அருமறைகளை அடிகள் செந்தில்நாயகத்திற்கு உபதேசித் தருளியதுடன் தெய்வவழிபாடு செய்தல் தமது தெய்வவழிபாட்டிற்குத் தொண்டுசெய்தல் ஆகியவைகளிலும் பழக்கப்படுத்தினார்.

விளையாட்டு வினை

அடிகளார் மடாலயத்தின் தோட்டத்தில் கொத்தவரை பயிரிட்டிருந்தனர். அது நன்கு செழித்துத் தளதள வென்று வளர்ந்திருந்தது. ஒருநாள் மாலையில் தோட்டத்திற்குச் சென்ற செந்தில்நாயகம் சிறு கழி ஒன்றால் ஒரு கொத்தவரையை விளையாட்டாகத் தட்டினார். அது 'சடக்' கென்று ஒடிந்துவிட்டது. இவருக்கது விளையாட்டாக இருக்கவே எல்லாச்செடிகளையும் தட்டிவிட்டார். மறு நாள் தோட்டத்திற்குச் சென்ற அடிகள் கொத்தவரைச் செடிகளின் நிலைமையைக் கண்டு வயிறெரிந்தனர். யாரோ பொறாமை கொண்டு இவ்வாறு செய்துள்ளார்கள் என்று முடிவுகட்டிய அடிகள் அன்பர் ஒருவரைக்கொண்டு துப்பறியச் செய்தார். துப்பறியத் தொடங்கிய அன்பர் சூழ்ச்சித் திறம் உடையவர். அவர் சிறுவராகிய செந்தில்நாயகத்தைத் தூக்கித் தோளில்வைத்துக்கொண்டு, "நம் தோட்டத்தில் போடப்பட்டிருக்கிற கொத்தவரைச்செடிகள் கொழுத்துவளர்ந்துள்ளன. அவைகளைப் பாதியளவில் முறித்துவிட்டால் நன்றாகக் காய்க்கு,"மென்றனர். உடனே செந்தில்நாயகம், "நான் நேற்றே எல்லாவற்றையும் முறித்து விட்டேன்," என்று கூறினார். இதனை அண்மையில் இருந்து கேட்டுக்கொண்டிருந்த அடிகள், "உன்னுடைய வேலைதானா?" என்று கூறித் தண்டிக்கத் தொடங்கி இரண்டொரு பிரப்பம்பழங்கள் அளித்ததுடன்,

"கொத்த வரைச்செடியைக் கொண்டையள வாய்முறித்த
கைத்தலமே என்சொல் கருதிக்கேள்—பத்தர்க்கு
அருள்புரியும் ஆனைமுகத் தம்மானைக் கும்பிட்டு
இருள்வினைகள் செய்யா திரு"

என்னும் வெண்பா ஒன்றையும் இயற்றி அதனை மனப்பாடஞ்செய்து ஒப்புவிக்கக் கட்டளையிட்டனர். செந்தில் நாயகர் அறிவாற்றல் மிக்காராதலின் அதனை உடனே ஒப்புவித்து விட்டனர்.

செய்யுள் இயற்றுதல்

திருவிழாக்காலங்களில் ஆமாத்தூர்ச் சிவபிரான் திருவுலா வரும்போது அடிகள் புதுப்பாடல் இயற்றிப் பணிதல் உண்டு. அடிகள் ஒருநாள் செந்தில்நாயகத்தைப் பார்த்து, "விடைப்பரிமே லாமாத்தூர் வீதிவலம் வருவானே" என்ற ஈற்றடி ஒன்றைக்கொடுத்துப் பொருட்செறிவும் தொடர்பும் உடையதாகச் செய்யுளைப் பாடிமுடிக்கக் கட்டளையிட்டனர். உடனே செந்தில்நாயகம்,

" அடைக்கலமே எனவுனைநான்
　　அடைந்திட்டேன் ஆதலினால்
தடைப்படுத்தா துன்னுடைய
　　தண்ணருட்பே றீந்தருள்வாய்
சடைத்தலையிற் கங்கையுடன்
　　சந்திரக்கன் றணிந்ததொருவெள்
விடைப்பரிமே லாமாத்தூர்
　　வீதிவலம் வருவானே."

என்ற பாடலைச்செய்து முடித்தனர். இதனைக் கேட்டவர்கள் மிக வியப்படைந்தார்கள். "குலவித்தை கல்லாமல் பாகம்படும்," என்பர். அடிகள்குலம் கவிஞர்குலம் அன்றோ?

ஒருநாள் பலபேர்கூடிப் பாடல்களைத் திருத்துதல் முதலிய வேலைகளை இரவில் செய்துகொண்டிருந்தனர்

இளைஞராகிய செந்தில்நாயகம், "தூக்கம் வருகின்றது" என்று கூறினர். அடிகளார் உடனே,

" சத்தி வடிவேற்கைச் சண்முகனைச் சந்ததமும்
நத்திஎழுத் தாறும் நவின்றிட்டேன் — பத்தியுடன்
ஆக்கம் பெருக்கி அருள்விளக்கும்
தூக்கம [illegible] "

என்று ஒரு செய்யுளைப் பாடினர்.

### படிப்புத்திறமை

பள்ளிமாணவர்களின் கல்விநிலையை ஆராய்ந்தறிதற்பொருட்டு ஆய்வாளர் (பள்ளிக்கூடங்களின் இன்ஸ்பெக்டர்) வந்தார். பள்ளிக்கூடத்துத் தேர்வுவேலையை முடித்துக்கொண்டு தண்டபாணி அடிகளைக் காணவந்தார். அடிகள் ஆய்வாளரைப் பார்த்துச், "செந்தில்நாயகம் தங்கள் கேள்விகட்குத் தக்க பதிலுரைத்தானா?" என்று உசாவினர். ஆய்வாளர் "ஆம்" என்று உரைத்தார். பிறகு அடிகள், "நமது போதனைத் திறனையும் பாருங்கள்," என்று உரைத்துத் தில்லைத் திருவாயிரம் என்னும் தமது நூலைச் செந்தில்நாயகத்திடம் கொடுத்துப் படிக்கச்சொன்னர். செந்தில்நாயகம் சந்தத் திருப்புகழ் முதலிய பெருஞ் செய்யுட்களை இனியமுறையில் இசையுடன் படித்தார். ஆய்வாளர் செந்தில்நாயகத்தின் படிப்புத்திறமையைக் கேட்டு வியந்தார். "என்னால்கூட இவ்வாறு படிக்கமுடியாது," என்று பாராட்டிக்கூறினர். இவ்வாறு செந்தில்நாயகத்தின் இளமைப்பருவம் கழிந்தது. தண்டபாணி அடிகள் காலமானர்.

### ஆதீனத்திற்கு அழைத்தல்

தந்தையார் காலமான பின்பு செந்தில்நாயகர், அடிகளாரின் அடியவர் பலரின் துணையுடன் உறைந்திருந்தனர்.

அகவை இருபதாகியது. அந்நாளில் திருவாவடுதுறை ஆதீனத்தார், ஆதீனத்தின் சின்னப்பட்டத்திற்கு ஒரு வரைத் தேடினர். செந்தில்நாயகரின் அறிவாற்றல் முதலியவைகளைக்கேள்வியுற்று இவரை அழைத்துச்செல்ல முயன்றனர். தாயாராகிய சுந்தரத்தம்மையாருக்கு மகனை விட்டுப் பிரிவதற்குச் சிறிதும் விருப்பமில்லை. பிறந்த நாட் குறிப்பை ஆராய்ந்து நோக்கியபோது அக்குறிப்பும்,

"நாட்டில் ஒரு மடாதிபதி இவனை நாடும்
நங்குழந்தாய் செயிற்கெடுதி திண்ணம் திண்ணம்"

என்று மாறுபாடாகவே கூறிற்று. ஆகவே, ஆதீனத்தார் தமது முயற்சியைக் கைவிட்டனர். செந்தில்நாயகர் தமது ஆதீன வளர்ச்சிக்கான செயல்களை மேற்கொண்டார்.

ஆலயத்தொண்டு

தண்டபாணியடிகளின் மாணவராகிய இராமாநந்த அடிகள் தம் குருமூர்த்திக்கு ஆலயம் முதலியவைகளை அமைக்க எண்ணினர். தம் அடியவர்களைப் பொருளுடன் அனுப்பினர். செந்தில்நாயகர் உடனிருந்து ஆலயம் முதலியவைகளை இனிதுமுடித்தார். இராமாநந்த அடிக ளோடு தொடர்புகொண்டு நெருங்கிப் பழகியிருந்தார்.

நூல்கள் இயற்றல்

தண்டபாணி அடிகளைப் போலவே செந்தில்நாயகரும் திருப்புகழ்ச் சந்தப்பாக்கள் முதலியவைகளை இயற்றுவதி லும் நூல்களைப் பாடுவதிலும் சிறந்து விளங்கினர். தண்ட பாணி அடிகளின் வரலாற்றை அவர் இயற்றிய குருபரதத் துவ நூலின் துணையும் தமது கேள்வியும், அவரது நூலின் ஆதரவும் கொண்டு 440 செய்யுட்களில் பாடி அச்சிட்டு ஏழுநாள் வரை படித்து அரங்கேற்றஞ் செய்தார். தண்ட பாணி யடிகளால் திருத்தொண்டத் தொகையைப்போல்

தொகுத்துச் சுட்டிப் பாடப்பெற்றிருந்த கௌமாரத் தொகையை விரித்துக் கௌமாரபுராணம் என்னும் பெயருடன் புராணமாகவும் பாடிமுடித்தார். தண்டபாணியடிகளால் இயற்றப்பெற்ற புலவர்புராணம், அருணகிரிநாதர்புராணம், திருச்செந்திற்கோவை, கௌமாரவிஜயம், வேலலங்காரம், மயிலலங்காரம், ஆறெழுத்தலங்காரம், முருகாநந்தலகரி முதலிய பல நூல்களை அன்பர்களின் உதவிகொண்டு அழகியமுறையில் பதிப்பித்து வெளியிட்டிருக்கிறார்.

குண நலன்கள்

செந்தில்நாயக அடிகள் சீரிய குணநலங்கள் அமையப் பெற்றவர். தந்தையும் குருவுமான தண்டபாணியடிகளின் கௌமார நூற்கருத்தையே பேசுவதும் அவர் வடிவையே எண்ணுவதும் அவரது திருக்கோயிலில் பூசனை முதலிய வழிபாடுகள் செய்வதுமே இவருக்குத் தொழிலாக இருந்தது. இவர் எவரிடத்திலும் இனிமையும் எளிமையுமாகப் பழகும் பண்பினர். சினம் என்பதை இவரிடஞ் சிறிதும் காணமுடியாது. மிகுந்த மனவருத்தம் உள்ளத்தில் இருந்தால் ஓரளவுதான் வெளிப்படும். அதனையும் உடனே மாற்றிவிடுவார். வெளிப்பகட்டை இவர் ஒரு சிறிதும் விரும்பமாட்டார். இவரை முன்பின் அறியாதவர் பார்ப்பதற்கு வருவார்கள். "சுவாமிகள் எங்கே?" என்று இவரையே கேட்பார்கள், "உள்ளே இருக்கிறார்கள்" என்று செந்தில்நாயக அடிகள் பதிலுரைப்பார். வந்தவர்கள், "எப்போது பார்க்கலாம்?" என்று கேட்டால் பூசையின்போது "பார்க்கலாம்" என்பார். வந்தவர்கள் பூசைவரையில் இருப்பார்கள்; பிறகுதான் வந்தவர்கள் உண்மையை உணர்வார்கள்.

இறுதி

செந்தில்நாயக அடிகளாரின் தாயார் இறைவன் திருவடிநீழலை யடையுங்காலம் நெருங்கியபோது, செந்தில் நாயகரை அழைத்து, "அப்பா நான் இறந்தபிறகு இரங்கற்பா பாடுவாயன்றோ? அதனை இப்போதே பாடு; நான் கேட்டுவிடுகிறேன். பிறகு கேட்க முடியாதன்றோ?" என்றார். செந்தில்நாயகர் அதற்கு இணங்கவில்லை. அடிகளார் சித்திரபானு ஆண்டில் (1942) சித்திரைத்திங்கள் 19-ஆம் நாள் ஊனுடலை ஒழித்து முருகப்பெருமானின் திருவடிநீழலை அடைந்தார்.

செந்தில்நாயக அடிகள் இயற்றிய நூல்கள் :-

1. தண்டபாணி யடிகள் புராணம் (பாடல்)
2. தண்டபாணியடிகள் புராண உரைநடை
3. கௌமாரத் திருவந்தாதி
4. கௌமாரபுராணம்
5. அழகியநாதமாலை
6. முருகன் கட்டளைக்கலித்துறையந்தாதி
7. சித்திவிநாயகர் பதிகம்
8. திருப்புகழ்ப்பதிகம்
9. இராமாநந்த பிரதாபச்சிந்து
10. மயிலம் முருகக்கடவுள் நவரத்தினத் திருப்புகழ்
11. ஆமாத்தூர் முருகன்வண்ணமஞ்சரி
12. இராமாநந்தசுவாமிகள் வரலாறு

# கச. கந்தசாமி அடிகள்

கொங்குநாட்டில் உள்ள கோயம்புத்தூரை யடுத்த கணபதியூர் என்னும் சிற்றூரிலே கங்காகுலம் என்னும் கவுண்டர்குலத்திலே கந்தசாமி அடிகள் ஆங்கிலம் 1892-க்குச் சரியான நந்தன ஆண்டு சித்திரைத்திங்கள் 8-ஆம் நாள் பூராடவிண்மீனிலே நிலவுலகில் தோன்றி யருளினர். தந்தையார்பெயர் வேங்கடரமண கவுண்டர். தாயார்பெயர் குட்டியம்மையார். சிரவணபுரம் கௌமார மடாலயத்தை நிறுவிய உயர்திரு. இராமாநந்த அடிகள் என்னும் பெரியாரது உடன்பிறந்தார் மைந்தர் இவர்.

தக்க காலத்திலே கல்விப்பயிற்சி செய்விக்கப் பெற்றார். திண்ணைப்பள்ளி முதலியவைகளில் சின்னாள் கல்வி பயின்றார். ஆங்கிலப் பாலபாடத்துடன் இவரது பாடசாலைக் கல்வி முடிந்துவிட்டது. பெற்றோரும் காலமாயினர். கந்தசாமியார் பள்ளியைவிட்டும் படிப்பை விட்டிலர். திருக்குறள், திருவிளையாடற்புராணம், திருத்தொண்டர்புராணம், தேவாரம் முதலியவைகளைக் கற்று அவைகளிலெல்லாம் வல்லவரானார். அடிக்கடி இராமாநந்த அடிகள்பாற் சென்று நெருங்கிப் பழகியமையின் துறவிகள் கூட்டுறவும் நன்னிலைக்கண் ஊக்கமும் ஏற்பட்டு வளர்ந்து வரலாயின.

கந்தசாமியார் துறவறத்தை மேற்கொள்ளத் துணிந்தார். தமது உடல் பொருள் ஆவி ஆகிய மூன்றையும் இராமாநந்தஅடிகளுக்குக் காணிக்கையாகக் கொடுத்து அவருடைய திருவடிகளிலே அடியற்றமரம்போல் வீழ்ந்து வணங்கினார். இராமாநந்த அடிகள் கந்தசாமியாரின் உள்ளம் துறவுநிலையை மேற்கொண்டொழுகற்குப் பண்பட்டிருத்தலைக் கண்டார். கானவன் வலையிற்பட்டுக் கைதப்பி யோடும் மான்போல் ஓடிவந்து தம்மை அடைந்த

கந்தசாமியாருக்கு வாழ்த்துரைகள் வழங்கினார். ஆறெழுத்தருமறையை அன்புடன் கூறி அருளுரை புகன்றார். அது முதல் கந்தசாமியார் தவவாழ்க்கையை மேற்கொண்டு பிறவிக்கடலைப் போக்கமுயன்றார்.

கந்தசாமியாரின் கல்வி அறிவு, ஒழுக்கம், புலமை முதலிய நல்லியல்புகளைக்கண்ட இராமாநந்த அடிகள் இவரைப் பழநிப்பதிக்கு அழைத்துச்சென்று கல்லாடை வழங்கித் துறவுக்கோலத்தை அருளியதுடன் தமக்குப் பின் தமது கௌமாரமடாலயத்தைப் பாதுகாக்கும் தலைமைப் பதவியையும் வழங்கியருளினார்.

பின்னர்க் கந்தசாமியடிகள் சிறிது மலையாளமொழிப் பயிற்சியும் வடமொழிப்பயிற்சியும் பெற்றார். செய்யுள் செய்யும் ஆற்றல் கந்தசாமிஅடிகட்கு இயற்கையாகவே அமைந்திருந்தமையின் கணக்கற்ற தமிழ்ச்செய்யுட்களைப் பாடலானார். மலையாளமொழியில் இருந்த பக்தமாலா என்னும் நூலைத் தமிழில் மொழிபெயர்த்துப் பக்த மான்மியம் என்னும் பெயருடன் தமிழில் பாடிமுடித்தார். பிள்ளைத்தமிழ், கலம்பகம், அந்தாதி, கோவை முதலிய நூல்களையும் இயற்றினார்.

நூல் இயற்றும் காலம் போக எஞ்சிய காலங்களில் அன்பர்களுக்கு நல்லுரைவழங்கல், கல்விபோதித்தல் இறைவழிபாடுசெய்தல், மனத்தை ஒருவழிப்படுத்தித் தவம்புரிதல் முதலிய மேலாஞ் செயல்களையே எந்நேரமுஞ் செய்ததே அன்றித் தமது தவப்பொழுதை ஒரு கணமாயினும் அவப்பொழுதாக்கார். அடிகள் அன்பையும் அருளையுமே உடலாகப் பெற்றவராய்த் திகழ்ந்து நின்றார். கந்தசாமிஅடிகளின் நல்லுரையால் பல அன்பர்கள் கொலை புலைநீத்து நிலைபெற்ற நல்லறிவாளராயினர்.

கந்தசாமிஅடிகளாற் பாடப்பெற்ற பாடல்கள் பதினான்காயிரம். அவைகள் யாவும் பதிப்பாகி வெளிவந்து உலவுகின்றன. இயற்றிய நூல்களின் பெயர்கள்.

1. பக்தமான்மியம்
2. சங்கராச்சாரியார் வைபவம்
3. பேரூர்க்கலம்பகம்
4. பேரூர்க்கோவை
5. காரமடைத்தல புராணம்
6. அன்னியூர்த்தல புராணம்
7. கௌசைத் தலபுராணம்
8. பேரூர் பச்சைநாயகிபிள்ளைத்தமிழ்
9. பேரூர் சாந்தலிங்கர்பிள்ளைத்தமிழ்
10. இராமாநந்தர் பிள்ளைத்தமிழ்
11. சிரவை முருகன்பிள்ளைத்தமிழ்
12. பத்திராசலம் இராமர்பிள்ளைத்தமிழ்
13. குருந்தமலை முருகன்பிள்ளைத்தமிழ்
14. திருவஞ்சைக்களம் பிரபந்தங்கள்
15. பழநிமலைப் பிரபந்தங்கள்
16. அவிநாசிப் பிரபந்தத்திரட்டு
17. மருதமலைப் பிரபந்தத்திரட்டு
18. இரத்தினாசலப் பிரபந்தம்
19. வண்ணத்திரட்டு
20. திருப்புகழ்த் திரட்டு
21. முருகன் எகபாத அந்தாதி
22. விநாயகர் யமகஅந்தாதி முதலியன.

---

## கரு. காஞ்சி நாகலிங்கமுனிவர்

*தோற்றம்*

காஞ்சிமாநகர்க்கு அண்மையில் உள்ள ஏகனும் பேட்டை என்னுஞ் சிற்றூரில் நாகலிங்கமுனிவர் 1865-ஆம் ஆண்டு ஐப்பசித்திங்கள் ஆறும்நாள் தோன்றினர். முனிவரின் தந்தையார்பெயர் சரவணப்பெருமாள் முதலியார்; தாயார்பெயர் மனோன்மணி அம்மையார். குலம் செங்குந்த குலம்.

*கல்வி*

முனிவர், ஐந்தாவது அகவையில் பள்ளிக்கு அனுப்பப் பெற்றார். பள்ளிக்கல்வியை, கச்சபாலயதேசிகர் சீனிவாசமுதலியார் என்பவர்களிடங் கற்றார். பன்னிரண்டாம் அகவையில் குலத்தொழிலாகிய நெய்தல் தொழிலில் ஈடுபட்டு இரண்டோராண்டுகள் அத் தொழிலைப் புரிந்தார். முனிவர், சிறுவராயிருக்கும்போதே தந்தையார் காலமானார்.

*சென்னையில் தமிழ்க்கல்வி*

பிறகு, முனிவர்உறவினர் சார்பில் சென்னைக்குச் சென்றார். தமிழ்மொழியைக் கற்கவேண்டும் என்னும் அவா முனிவருக்குண்டாகியது. அந்நாளில் சென்னையிற் செந்தமிழ்ச்செல்வர்களாக விளங்கிய பூவை கலியாண சுந்தர முதலியார், மயிலை சண்முகம்பிள்ளை, இராயபுரம் சக்கராவ், திருவண்ணுமலை ஆதீனம் குன்றக்குடி ஆறுமுகத்தம்பிரான் முதலியவர்களிடம் இலக்கண இலக்கியங்களை நன்குபயின்றார். காஞ்சிபுரம் முத்துக் கச்சபேச்சர சிவாச்சாரியாரிடம் சைவதீட்சை பெற்றார்.

சைவத்தொண்டு

சென்னைச் சிவனடியார் திருக்கூட்டத்தைத் தொடங்கி வளர்ப்பதில் முனிவர் பெரும்பங்கு கொண்டார். சென்னை அருணாசலேசுரர் திருக்கோயில் மண்டபத்தில் அமைக்கப் பெற்று நடந்த மெய்கண்ட சந்தான சபையின் துணைத் தலைவராக அமர்ந்து பல ஆண்டுகள் பணிபுரிந்தார். இச் சபையின் ஆதரவில் தேவார பாடசாலை ஒன்றையும் நடத்தினர். மெய்கண்டான் கல்லூரி என்னும் பெயருடன் கல்லூரி ஒன்றை ஏற்படுத்திச் சைவசித்தாந்த நூல்களைப் பலருக்குங் கற்பித்தார். கோவிலில் நிகழ்ந்த பூசனை முதலியவைகளினும் முனிவர் பங்குகொண்டார்.

நூல்கள் வெளியிடுதல்

பதிப்பகம் ஒன்றை ஏற்படுத்திப் பல நூல்களை அச்சிற் பதிப்பித்து வெளியிடும் பணியை மேற்கொண்டார். இந்த அருஞ்செயலுக்குத் திருவாவடுதுறை ஆதீனத்தலைவர்களின் பேருதவியுங் கிடைத்தது. பாண்டித்துரைத் தேவர் அவர்களின் வேண்டுகோட்படி சிவஞானபோதச் சிற்றுரையை அழகிய பதிப்பாக வெளியிட்டார். சிவஞான போதம் உள்ளிட்ட சைவசித்தாந்த நூல்கள் பதினன்கினையும் உரையுடன் ஒரே தொகுதியாகத் திருவாவடுதுறை ஆதீன மரபின்படி மெய்கண்டசாத்திரம் என்னும் பெயரோடு வெளிப்படுத்தினர். இந்நூல் வெளியீட்டின் சிறப்பைப்பார்த்துத் திருவாவடுதுறை அம்பலவாண தேசிகர் முனிவருக்கு 'மெய்கண்ட சாத்திரப் பிரசாரகர்' என்னுஞ் சிறப்புப்பெயர் வழங்கினர். திருவுந்தியார், திருக்களிற்றுப்படியார் என்னும் நூல்களைத் திருப்பனந்தாள் காசி மடத்தலைவர் காசிவாசி சொக்கலிங்கத் தம்பிரான் சுவாமிகள் அவர்களுடைய துணையைக்கொண்டு தனியாகவும்

வெளிப்படுத்தினர். தாயுமானவர் பாடல், பன்னிரு திருமுறை, காஞ்சிப்புராணம், காஞ்சிக்கட்டளைக் கலித்துறைப் புராணம், திருப்புகழ், செங்குந்தர் பிரபந்தத்திரட்டு, தமிழ் அகராதி முதலிய நூல்களையுஞ் செவ்விய முறையில் அச்சிட்டு வெளிப்படுத்தினர்.

செங்குந்தமித்திரன்

தான் தோன்றிய செங்குந்த குலமக்களின் முன்னேற்றத்தின் பொருட்டு முனிவர் அரும்பெருந் தொண்டு செய்தார். ஆங்காங்கு சங்கங்கள் அமைக்கச்செய்தார். அவைகளின் விழாக்களில் தலைமைதாங்கிக் குலமுன்னேற்றத்திற்கான வழிகளையெல்லாங் கூறினர். செங்குந்தமித்திரன் என்னும் பத்திரிகையைத் தொடங்கித் தாமே சின்னாள் நடத்தினர். பிறகு தக்கார்களிடம் அப்பொறுப்பை ஒப்புவித்தார். 1927-இல் தொடங்கப் பெற்ற அப் பத்திரிகை இன்றுவரை நன்குநடைபெற்று வருகிறது.

திருமணமும் மக்கட்பேறும்

தக்க காலத்தில் முனிவர்க்குத் திருமணம் நடைபெற்றது. குடும்பத்துடன் தென்னாட்டுச் சிவப்பதிகள் பலவற்றிற்கும் காசி முதலிய இடங்கட்கும் முனிவர் இறைவழிபாட்டுச் செலவாகச் சென்றார். தென்னாட்டுச்செலவின் போது திருவாவடுதுறை ஆதீனத்தாரும், இராமநாதபுரம் பாற்கரசேதுபதி மன்னரும் பிறரும் வழிச்செலவில் உதவிபுரிந்தனர். வடநாட்டிற்குச் சென்றபோது திருவாவடுதுறை ஆதீனத்தாரே பேருதவி புரிந்தார்கள். முனிவர்க்கு ஆண்மக்கள் இருவரும், பெண்மகள் ஒருத்தியும் தோன்றினர்.

நூல்கள் இயற்றல்

திருத்தணிகை வண்ணமஞ்சரி, தென்கடம்பன் துறை பதிற்றுப்பத்து, வடபழநி மயிலேறும்பெருமாள் மாலை, இரட்டைமணிமாலை, திருவாமாத்தூர் வண்ணங்கள், திருவெறும்பியூர்ப்புராணம் முதலியன முனிவரால் இயற்றப்பெற்ற நூல்கள்.

சிறப்புப்பெயர்கள்

காஞ்சிபுரம் ஞானப்பிரகாசஅடிகள்பால் துறவு பெற்றபின் நாகலிங்கமுதலியார் என்னும் பெயர் நாகலிங்கமுனிவர் என மாறியது. ஞானப்பிரகாச அடிகளால் கச்சியடிகள் என்ற பட்டமும், இலங்கைத் திரு. பொன்னம்பலம்பிள்ளையவர்களால் வித்தியாபிரசாரகர் என்ற பட்டமுங் கொடுக்கப்பட்டன. வண்ணத்தின் இலக்கணங்களை முனிவர், வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் என்னும் முருகதாசசுவாமிகளிடத்திற் பயின்று வண்ணம் பாடுவதில் வல்லவராக ஆனார். அப்பொழுது மேற்படி சுவாமிகளால் வண்ணக்களஞ்சியம் என்னும் சிறப்புப்பெயர் கொடுக்கப்பட்டது.

முத்துவிழா

1944-ஆம் ஆண்டு ஜூலைத்திங்கள் முதல்நாளில், சென்னை கோகலேமண்டபத்தில் திரு. வி. கலியாணசுந்தர முதலியார் அவர்கள் தலைமையில் முத்துவிழாச் சிறப்பாக நடைபெற்றது.

இறுதி

1950-ஆம் ஆண்டு ஜூலைத்திங்கள் ஒன்பதாம் நாள் தமது எண்பத்தாறுவது அகவையில் முனிவர் இறைவன் திருவடிநீழலை எய்தினர்.

---

## கக. முத்துச்சாமிக் கோனார்

*பிறப்பு*

முத்துச்சாமிக்கோனார் என்பவர், சேலம் மாவட்டத்திலே திருச்செங்கோடு என வழங்கும் திருக்கொடிமாடச் செங்குன்றூரிலே ஆயர்குலத்தில் 1858-ஆம் ஆண்டு ஆனித் திங்களிலே தோன்றினார்.

*கல்வி*

இளமைப்பருவத்தில் திண்ணைப்பள்ளியிற் சேர்ந்து கல்விகற்றார். பிறகு தெலுங்கு, வடமொழி ஆகிய மொழிகளையுந் துணைமொழிகளாகத் தக்கார்பால் கற்றுத் தேறினார். பாடல்களை மனப்பாடஞ்செய்யுந் திண்மை கோனாருக்கு நன்கு அமைந்திருந்தது. எவரேனும் வெண்பாப் பாடினால் கோனார் அதனைக் கருத்துடன் கேட்டுக்கொண்டிருப்பார். பிறகு, "அன்புகூர்ந்து இந்தப் பாட்டை இன்னொரு தடவை இயம்புங்கள்," என்பார். இரண்டாவது முறையும் அப்பாட்டுக் கூறப்பெற்றபின் கோனார் அதனைத் திருத்தமுறக் கூறிவிடுவார். வெண்பாவை இருமுறை கேட்ட அளவில் கற்றுக்கொண்டு விடுதல் வேண்டும். அவ்வாறு கற்றுக்கொள்ளாதவனை மந்தமதியினன் என்று சான்றோர் சாற்றுவர். "வெண்பா இருகாலிற் கல்லானை...." என்பது ஔவையார் திருவாக்கு. கோனார் இசைப்பயிற்சியும் நன்கு பெற்றிருந்தார். நகைச்சுவை பொருந்தப் பேசும் ஆற்றலும் அமையப்பெற்றவர். இறைவழிபாடு முதலியவைகளிற் கோனார் பெரும்பங்கு எடுத்துக்கொண்டு ஆடியும் பாடியும் மக்கட்கு மகிழ்ச்சி யளிப்பார்.

பாரதம், இராமாயணம், திருக்குறள், பத்துப்பாட்டு, எட்டுத்தொகை முதலிய இலக்கிய நூல்களையும், நன்னூல், தொல்காப்பியம், அகப்பொருள், புறப்பொருள் முதலிய இலக்கண நூல்களையும்; திருவிளையாடற்புராணம், கந்த

புராணம், மச்சபுராணம், கூர்மபுராணம், இலிங்கபுராணம் முதலிய புராணங்களையும் தக்காரிடத்திலே பாடங்கேட்டுப் புலமையிற் சிறந்தவரானார். சைவநூல்கள், சைவத் திருமுறைகள் ஆகியவற்றிலும் நல்ல திறமை பெற்றார்.

கல்வித்தொண்டு

சித்தூர்ப் பெருநிலக்கிழார் ஒருவருடைய அரும் பொருட்டுணையால் 'விவேக திவாகரன்' என்னும் பதிப்பகத்தை ஏற்படுத்தினார். அப் பதிப்பகத்தில் இருந்து 'விவேக திவாகரன்,' 'கொங்குவேள்' என்னும் பத்திரிகைகளை வெளிப்படுத்தினார். மேலும் புத்தகங்கள் பலவற்றையும் அச்சிற் பதிப்பித்து வெளியிட்டார். கொங்குநாட்டு ஊர்த்தொகை, மங்கல வாழ்த்து, அர்த்தநாரீசுவரர்மாலை, வாழி, கருணாகரமாலை, செங்கோட்டுமாலை, சிவமலைக் குறவஞ்சி, சிவமலைப்புராண உரை, அபிடேகமாலை, திருச்செங்கோட்டுப்புராணம், திருச்செங்கோட்டுக்கலம்பகம், திருச்செங்கோட்டுப்பிள்ளைத்தமிழ், அர்த்தநாரீசுவரர் பதிகம், மோரூர் பாம்பலங்கார வருக்கக்கோவை, கபிலமலைக் குழந்தைக்குமரர் வருக்கக்கோவை, மல்லசமுத்திரம் சோழீசுவரர்மல்லைமாலை முதலிய பல நூல்களைத் தமது அச்சுக்கூடத்தில் பதிப்பித்து வெளியிட்டார்.

அறிஞர்க்குதவி

அக்காளில் புலவர்கள் கொடையாளர்களைத் தேடி ஊரூராகச் செல்வர். அத்தகையோர் முத்துச்சாமிக் கோனார் அவர்களிடம் ஏகுவர். சிற்றுதவியாக இருப்பின் கோனார் தாமே அவ்வுதவியை முடித்தனுப்புவர். பெரும் புலவராய்ப் பேருதவியை நாடிச் செல்பவர்களைத் தக்க செல்வர்பால் அழைத்துச் சென்று அப் புலவரின் பெருமையைச் செல்வர்க்கறிவித்து நன்கொடை வழங்கச் செய்வார். அச்செல்வர்கள் கோனாரிடம் பெருமதிப்பும், பேரன்புங்

கொண்டவர்களாதலினற் கோனர் மனங் கோணுவாறு நடந்துகொள்வர். மற்றும் விருந்தினர்ப் பேணுவதிற் கோனர் பேரார்வம் உடையவர். தம் இல்லத்திற்கு வரும் புலவர்க்கும் பிறர்க்குந் தக்காங்கு விருந்து நடத்திக் களிப்பிப்பார். விருந்தோம்புங் கடமை தமிழர்கட்குத் தனியுரிமையெனின், தண்டமிழ்ப் பாவாணர்கட்குப் பெருங் கடமையும் உரிமைப்பண்பும் ஆகுமன்றோ?

அட்டாவதானம்

கோனர் காலத்தில் யாழ்ப்பாணம் மேலைப்புலோலி நா. கதிரைவேற்பிள்ளை செந்தமிழ்நாட்டிலே சொற்பொழிவுகளும் அட்டாவதானமுஞ் செய்துகொண்டிருந்தார். கோனர் கதிரைவேற்பிள்ளையிடங் கற்று அவதானமுஞ் செய்தற்குப் பழகிக்கொண்டார்.

செப்புப்பட்டயம்

செப்புப்பட்டயம், கல்லெழுத்து முதலியவை அகப்படும்போதெல்லாம் அவைகளை வாங்கித்தொகுத்து வைத்தார். அதனல் தமிழ்வேந்தர்கள் கடல்தாண்டிப் போர்செய்து நாடுபிடித்து ஆட்சிசெய்தனர் என்னுஞ் செய்திக்கு ஆதாரமும் இவர்பால் கிடைத்தது.

பொதுநலத்தொண்டு

திருச்செங்கோட்டில் ஒரு பெரிய வீட்டைப் பொதுப் பணிக்கு வழங்கினர். அவ் வீட்டில் ஒரு புத்தகசாலையையும் அமைத்து நன்கொடையாக்கிப் பொதுமக்கள் பலரும் பயனடையச் செய்தார். அவ்வீட்டில் சைவசபை ஒன்றையும் ஏற்படுத்தினர். அவ்வவையில் சைவ நன்மக்களாகிய காசிவாசி செந்திநாதையர், சோமசுந்தர நாயகர், சித்தாந்த சரபம் பூவை கலியாணசுந்தர முதலியார், நல்லசாமிப் பிள்ளை முதலிய பேரறிஞர்களைக் கொண்டு ஆண்டுவிழா,

சொற்பொழிவுகள் முதலியன செய்வித்துப் பொதுமக்கள் சைவசமயத்தின் மேம்பாட்டையும் சிறப்பையும் அறிந்து நல்ல பயனடையுமாறு செய்தார். இதனால் அங்குச் சைவமணங் கமழ்ந்து விளங்கியது.

நூல்கள் இயற்றல்

திருச்செங்கோட்டுமோன்மியம், திருப்பணிமாலை, மும் மணிக்கோவை, ஒருபா ஒருபஃது, அர்த்தசிவாம்பிகை நவகம், செங்கோட்டுவேலவர் பஞ்சாமிர்தம், சங்ககிரி சென்னகேசவப்பெருமாள் ஊஞ்சல், பழையகோட்டை சண்டிகேசுவரி பதிகம், கொங்குமண்டல சதகவுரை ஆகிய நூல்களை இயற்றியதுடன் அமர்நீதி நாயனார் வரலாறு, சண் டன் வரலாறு, புரந்தரதாசு வரலாறு, சக்குபாய் வரலாறு முதலிய வரலாறுகளை இசைப்பாட்டில் அமைத்தும் இசை யரங்குகளில் நடத்தினர்.

சிறப்புறுதல்

கோனரின் தமிழ்த்தொண்டுகளை யறிந்து மகிழ்ந்த சேதுபதி மன்னர் பெரும்பொருள் வழங்கியதுடன் பொன் னுடையும் போர்த்தினர். திருவாவடுதுறை ஆதீனத் தலைவர் அம்பலவாணதேசிகத் தம்பிரான் அடிகளும் கோனரை யழைத்துப் பாராட்டிப் பொன்னுடை போர்த் தினர்.

இறுதி

கோனர் திருச்செங்கோட்டுத் திருக்கோயிலிலும் திருப்பணிகள் பல செய்து சிவத்தொண்டராகவும் திகழ்ந் தார். இவருக்கு அறுவராண்மக்களும் ஒரு பெண்மகளுந் தோன்றினர். கோனர் தமது எண்பத்தாறும் அகவையில் 2-11-1944-இல் இறைவன் திருவடிநீழலை எய்தினர்.

## கஎ. வெ. ப. சுப்பிரமணியமுதலியார்

### தோற்றமுங் கல்வியும்

சுப்பிரமணிய முதலியார் 1857-ஆம் ஆண்டு ஆகஸ்டு திங்கள் பதினன்காம் நாள், திக்கெலாம் புகழும் திருநெல் வேலிக்கு அண்மையில் உள்ள வெள்ளக்கால் என்னும் ஊரிலே பிறந்தார். முதலியாருடைய தந்தையார் பெயர் பழநியப்பமுதலியார். பழநியப்பமுதலியார் திருநெல் வேலிநாட்டை ஆண்ட தளவாய்முதலியார் குடும்பத் துக்கு நெருங்கிய உறவினர். சுப்பிரமணியமுதலியார் அகவை ஐந்து ஆகும்வரை வெள்ளக்காலில் இருந்தார். பிறகு கல்விகற்றற்பொருட்டு நெல்லைக்குச் சென்றார். திண்ணைப்பள்ளிக்கூடம் ஒன்றிற் சேர்ந்து கல்விகற்கத் தொடங்கினர். அப் பள்ளியில் ஆசிரியராக அமர்ந்திருந்த அறிஞர் அழகிய சொக்கநாதபிள்ளை என்னும் பேரறிஞ ரின் சிறிய தந்தையார். அப் பள்ளியில் முதலியார் நான்கு ஆண்டுகள் படித்தார். பிறகு மிஷன் பள்ளிக்கூடத்திற் சேர்ந்து ஆங்கிலமுந் தமிழும் கற்கத் தொடங்கினர். அதன் பின் இந்து கலாசாலையிற் சேர்ந்தார். 1876-இல் மெட்ரி குலேஷன் தேர்வில் தேறினர். பிறகு சென்னையை அடைந்து கிறித்துவக் கல்லூரியிற் சேர்ந்து படிக்கத் தொடங்கினர். ஆயினும், உடல் நலம் இடந்தராதபடியால், அப் படிப்பை நிறுத்தினர்.

அப்பால் சென்னையில் ஏற்படுத்தப்பட்ட பயிர்த் தொழிற் கல்லூரியில் 1880-இல் சேர்ந்தார். அங்கு நான்காண்டுகள் படித்துப், "பயிர்த்தொழில் அறிஞர்" என்னும் பட்டம் பெற்றார்.

### தொழிலும் திருமணமும்

பயிர்த்தொழிற் கல்விகற்கச் சென்றபோதே முதலி யாருக்குத் திருமணம் நடைபெற்றது. மணமகளின் பெயர்

வேலம்மாள் அண்ணி. அம் மாதரசி இரண்டு பெண்மக்களை ஈன்றபின் 1899-இல் காலமாகவே மறு ஆண்டில் முதலியார் மறுமணஞ் செய்துகொண்டார். இரண்டாவது மனைவியின் பெயர் வடிவம்மாள் அண்ணி. இந்த இரண்டாவது மனைவியிடம் இரண்டு ஆண்மக்களும் ஒரு பெண்ணுந் தோன்றினர்.

முதலியார் 1884 முதல் 1890 வரை கால்நடை மருத்துவப் பிரிவில் அலுவல் பார்த்தார். பிறகு சென்னை ரெவினியூபோர்டு அலுவலகத்தில் வேலைபார்த்தார். பிறகு மேன்மேலும் பதவிகளில் உயர்வுபெற்று 1915-ஆம் ஆண்டு வரை வேலைபார்த்தார்.

### தமிழ்மொழிப் பயிற்சி

முதலியாருக்குத் தமிழ்மொழியினிடத்திலே இயற்கையாகவே ஆர்வம் நிரம்பியிருந்தது. அந்நாளில் அழகிய சொக்கநாதபிள்ளை என்னும் பெரும்புலவர் முத்துச்சாமிப்பிள்ளை என்னும் வள்ளலுடைய மாளிகையிலே தமிழ்வளர்க்கும் பணியில் ஈடுபட்டிருந்தார். முதலியார் தமக்குக் கிடைத்த ஒய்வு நேரத்தையெல்லாம் அழகிய சொக்கநாதபிள்ளையோடு தங்கியிருப்பதிலேயே செலவிட்டு வந்தார். அதனால் முதலியாருக்குத் தமிழ்ப்பயிற்சி வளர்ந்துகொண்டு வந்தது. மேலும் முதலியார் பாரதம், திருவிளையாடற் புராணம், குற்றாலத் தலபுராணம், கலிங்கத்துப்பரணி, நைடதம், நளவெண்பா, இராமாயணம் முதலிய நூல்களை அழகிய சொக்கநாதபிள்ளையிடமும் வேறு பல புலவர்களிடமும் பாடங்கேட்டுத் தமிழறிவைப் பெருக்கிக்கொண்டார். மேலும், உ. வே. சாமிநாதையரோடு முதலியார் நெருங்கிய நட்புக்கொண்டிருந்தார். ஐயர் வெளியிட்ட நூல்களை யெல்லாம் ஒன்று விடாமல்

வாங்கிப் படித்தார். மு. ரா. அருணசலக் கவிராயர், பூண்டி அரங்கநாதமுதலியார் முதலியோரும் முதலியாருடைய தமிழ்ப் பயிற்சிக்கு உறுதுணையாக அமைந்து நின்றனர்.

நூல்கள் இயற்றல்

முதலியார் முதலில், 'கால் நடைக்காரர் புத்தகம்' 'இந்தியாவில் கால்நடைகளுக்குக் காண்கிற உயிரழிப்பு நோய்கள்' என்னும் ஆங்கில நூல்களைத் தமிழில் மொழிபெயர்த்தார். இவைகளை அரசாங்கத்தார் வெளியிட்டனர். பிறகு ஆங்கிலப் புலவர் மில்ட்டன் என்பவர் எழுதிய சுவர்க்க நீக்கம் முதற்காண்டத்தைத் தமிழிற் செய்யுளாகப் பாடினார். ஹெர்பர்ட்ஸ் பென்ஸர் என்பவர் எழுதிய கல்வி விளக்கம் முதற்பகுதியை மொழிபெயர்த்தார். அகலிகையின் வரலாற்றை வெண்பா யாப்பினால் 'அகலிகை வெண்பா' என்னும் பெயரோடு சுவைததும்பப் பாடினார். பச்சோந்தியைப் பற்றி நகைச்சுவை ததும்ப எழுதப்பட்ட ஆங்கிலப் பாடல் ஒன்றை ஒட்டித் தமிழில் பல செய்திகளைச் சேர்த்துக் கோம்பிவிருத்தம் என்னும் நூலைப் பாடினார். நெல்லையில் எழுந்தருளிய நெல்லையப்பர்மீது நெல்லைச் சிலேடை வெண்பா என்னும் அரிய நூலைப் பாடினார். இந் நூலைப் பல புலவர்களும் போற்றினர். 'சர்வ சன செபம்' என்னும் பெயருடன் முதலியாரால் பாடப்பெற்ற சிறிய நூல் எல்லா மக்களாலும் போற்றப்படுகிறது. முதலியார் தாம் அடிக்கடி இயற்றிய தனிப்பாடல்களையெல்லாம் மற்றைய புலவர்களைப்போல் வீணாக்காமல் ஒன்றுபடுத்தித் தனிக்கவித் திரட்டு என்னும் பெயருடன் வெளிப்படுத்தினார்.

கம்பராமாயணம் என்பது கடல்போற் பரந்த பெரிய நூல். அந் நூலை எல்லோரும் கற்றுணர்வது மிக அருமை. கம்பராமாயணத்தின் இன்சுவையை எல்லோரும் நுகர

வேண்டும் என்று விரும்பிய முதலியார் கம்பராமாயணம் முழுவதையும் நன்காராய்ந்து, கதையின் தொடர்பு விடாமல் இனிய செய்யுட்களை மட்டும் திரட்டினார். அவைகட்கு விளக்கமான உரையும் கதைத்தொடர்பும் எழுதி முதலில் செந்தமிழ்த் திங்கள்வெளியீட்டின் வாயிலாக வெளியிட்டார். பிறகு புத்தகவடிவமாக வெளிப்படுத்தினார். 'கம்பராமாயணசாரம்' என்று பெயர் கொண்ட இந் நூல் எல்லோராலும் நன்கு போற்றப்படுகிறது.

### உடல் நலம்

"முப்பதில் முறுக்கு, நாற்பதில் நடுக்கம், ஐம்பதில் அசைவு, அறுபதில் ஆட்டம், எழுபதில் ஏக்கம், எண்பதில் தூக்கம்," என்ற பழமொழி நமது நாட்டிலே உலவி வருவதை எல்லோரும் அறிந்திருக்கலாம். இக்காலத்திய மக்கள் ஐம்பதில் கிழவர்களாகி எமனுடைய சீட்டை எதிர்பார்க்கத் தொடங்கிவிடுகிறார்கள். முதலியார் மேற்கூறிய ஊழ் முறைக்குப் புறம்பாகத் தமது வாழ்க்கையை நடத்தினார். எண்பதாவது அகவையிலும் முதலியார் இணையற்ற இளமை முடுக்குடன் இலங்கினார். முதலியாரைப் பார்த்த எவரும் அவர் முதியவர் என்று கூறத் துணியவில்லை. தமிழ்நூல் ஆராய்ச்சியும் தொண்டும் முதலியாருக்கு இளமைநலத்தை வளர்த்தன என்றே கூறவேண்டும்.

### இறுதி

எண்பதாண்டுகள்வரை தமிழ்த்தொண்டுசெய்து கொண்டு இளைஞராக விளங்கிய முதலியார் தமது 90-ஆம் வயதில், 1946-ஆம் ஆண்டு அக்டோபர்த்திங்கள் பன்னிரண்டாம்நாள் இவ்வுலக வாழ்வை நீத்து விண்ணகம் புகுந்தார். அவர் புகழ் நிலைநின்று நிலவுக.

---

## ௧௮. விபுலாநந்த அடிகள்

*பிறப்பு*

விபுலாநந்த அடிகள் ஈழநாட்டின்கண் உள்ள மட்டக் களப்பிலே 1892-ஆம் ஆண்டு மார்ச்சுத்திங்கள் இருபத் தேழாம் நாள் பிறந்தார். அடிகளின் தந்தையாரின் பெயர் சாமித்தம்பியார். தாயார் பெயர் கண்ணம்மையார். அடிக ளாருக்கு இடப்பட்ட பிள்ளைப்பெயர் மயில்வாகனன்.

*கல்விப்பயிற்சி*

1898-ஆம் ஆண்டில் கல்விப்பயிற்சி தொடங்கப்பட் டது. கல்முனை என்னும் ஊரில் உள்ள ஆங்கிலப் பாட சாலை, மட்டக்களப்பில் உள்ள மெதொடிஸ்ட் மிஷன் நடத் தரப் பாடசாலை, செய்ன்ட் மிக்கேல் பாடசாலை ஆகியவை களில் கல்விகற்றார். 1906-ஆம் ஆண்டில் கேம்ப்ரிட்ஜ் ஜூனியர் தேர்வில் தேறினர். 1908-இல் சீனியர் தேர்வில் வெற்றியடைந்தார். வைத்தியலிங்க தேசிகர் என்பவரிடம் முறையாகத் தமிழ்கற்றார். வடமொழியையும் நன்கு கற்றுத்தேறினர். அடிகளாரின் இளம்பருவத்திலேயே மும்மொழிப் புலமையும் உண்டாகி விட்டது. அடிகளார் இரவு பன்னிரண்டுமணிவரை படிப்பார். பிறகு காலை நான்கு மணிக்கே எழுந்து படிக்கத் தொடங்கிவிடுவார்.

*ஆசிரியத்தொழில்*

1909-ஆம் ஆண்டில் இருந்து 1911-ஆம் ஆண்டுவரை மட்டக்களப்பு செய்ன்ட் மிக்கேல் பாடசாலை, கல்முனை கத் தோலிக்க மிஷன் பாடசாலை ஆகியவைகளில் ஆசிரியத் தொழில் புரிந்தார். பிறகு கொழும்புநகர் ஆசிரியர் கல்லூரி யில் ஆசிரியப்பயிற்சிபெற்று மீண்டும் மட்டக்களப்பு செய்ன்ட் மிக்கேல் கல்லூரியில் ஆசிரியத்தொழில் நடத்

தினர். 1915—16-ஆம் ஆண்டுகளில் அரசினர் டெக்னிகல் கல்லூரியில் விஞ்ஞானம்பயின்று தேர்ச்சியடைந்தார். பிறகு மதுரைத் தமிழ்ச்சங்கத் தேர்வில் தேறிப் பண்டிதப் பட்டம் பெற்றார். 1917-ஆம் ஆண்டில் கொழும்பு அரசினர் கல்லூரியில் வேதிநூல் உதவியாசிரியராக விளங்கினர். 1920-ஆம் ஆண்டில் யாழ்ப்பாணத்து செய்ன்ட் பேட்ரிக்ஸ் கல்லூரியில் வேதிநூல் தலைமையாசிரியராக விளங்கினர். பி. எஸ்ஸி. தேர்வில் தேறினர். 1920-ஆம் ஆண்டு முதல் இரண்டாண்டுகள் மானிப்பாய் இந்துக்கல்லூரியில் தலைமையாசிரியராக விளங்கினர்.

*துறவு*

1922-ஆம் ஆண்டில் அடிகள் துறவு பூண எண்ணினர். சென்னை மயிலாப்பூரில் உள்ள இராமகிருட்டிண மடத்திற் சேர்ந்தார். அப்போது மயில்வாகனன் என்னும் பெயர் மாறிப் பிரபோதசைதன்யர் என்னும் பெயர் வந்தது. இராமகிருஷ்ண விசயம், வேதாந்த கேசரி ஆகிய பத்திரிகைகளுக்கு ஆசிரியராக இருந்து பல அரிய கட்டுரைகள் எழுதினர். செந்தமிழ், தமிழ்ப்பொழில் முதலிய பல பத்திரிகைகட்குக் கட்டுரைகள் வழங்கினர். சென்னையிலும் வெளியூர்களிலும் உள்ள பல கழகங்களினும் சங்கங்களினுந் தலைமை தாங்கிச் சொற்பொழிவுகள் பலசெய்தார். 1924-ஆம் ஆண்டில் கல்லாடை யணிந்து துறவுபூண்டு விபுலாநந்தர் என்னும் பெயர்பெற்றார்.

*பலதொண்டுகள்*

1925-ஆம் ஆண்டில் காலி, நாவலப்பிட்டி, கண்டி, மாத்தளை, தோப்பித்தோட்டம், வதுளை முதலிய இடங்கட்குச் சென்று சொற்பொழிவுகள் செய்தார். காரைத்தீவு, ஆலைப்பத்தி, மண்டூர், ஆரப்பற்றை என்னும் ஊர்களில்

உள்ள பாடசாலைகளை நடத்தும் பொறுப்பை மேற்கொண்டார். இவ்வாண்டில் சூன் திங்களில் மதுரைத் தமிழ்ச் சங்கத்தார் உ. வே. சாமிநாதையருக்குப் பொற்கிழி யளித்துச் சிறப்புச்செய்தபோது ஈழநாட்டுப் புலவர்களின் ஆணையாளராக மதுரைக்குவந்து அவ்விழாவைப் பெருமைப்படுத்தினர். கொழும்பு, கண்டி, நாவலப்பிட்டி, அநுராதபுரம் முதலிய ஊர்களில் சமயவளர்ச்சிக்குத் தொண்டுசெய்தார். காரைத்தீவு சாரதாவித்தியாலயம், கல்லடியுப்போடை சிவாநந்தவித்தியாலயம், திருக்கோணமலை, ஆங்கில கலாசாலைப் புதுக்கட்டிடம் முதலியவைகளுக்கு அடிப்படைக் கல் நாட்டினர். 1926-ஆம் ஆண்டில் யாழ்ப்பாணம் வண்ணார்பண்ணை வைத்தியேசுரர் வித்தியாலயம், விவேகாநந்த வித்தியாலயம் ஆகிய பாடசாலைகளை நடத்தும் பொறுப்பை மேற்கொண்டார். விவேகாநந்த சபையார் வேண்டுகோளின்படி கொழும்பு நகரில் விவேகாநந்த வித்தியாலயத்தைத் தொடங்கிவைத்தார். வைத்தியேசுவரர் வித்தியாலயத்தின் சார்பாகத் திக்கற்ற சிறுவர்களின் பொருட்டு மாணவர் இல்லம் ஒன்றை ஏற்படுத்தினர். 1927-ஆம் ஆண்டில் கண்டி சைவமகாசபைக்குத் தலைமைதாங்கி அரிய சொற்பொழிவு நிகழ்த்தினர். யாழ்ப்பாணம் மாணவர் மாநாட்டுக்குத் தலைமைதாங்கினர். இலங்கைக்குச் சென்ற மகாத்மா காந்தியை மாணவர் தலைவர் என்னும் முறையில் வரவேற்றார். முன் பொறுப்பேற்ற பாடசாலைகளின் பொறுப்பைப் பிறரிடம் ஒப்புவித்து விட்டு 1928-ஆம் ஆண்டில், திருக்கோணமலை ஆங்கிலக்கலாசாலையை வளர்க்கும் நோக்கத்தோடு அப் பாடசாலையின் தலைமைப்பொறுப்பை யேற்றுக்கொண்டார். 1931-ஆம் ஆண்டில் செட்டிநாட்டரசர் அண்ணாமலைச் செட்டியார், அண்ணாமலைப்பல்கலைக்கழகத்தில் தமிழ்ப்

பேராசிரியராக இருந்து பணியாற்றவேண்டுமென்று கேட்டுக் கொண்டதற்கிணங்கச் சில ஆண்டுகள் அண்ணுமலைப் பல்கலைக்கழகத்தில் இருந்து பணிபுரிந்தார். சில காரணங்களை முன்னிட்டுப் பின் பல்கலைக்கழக அலுவலை விட்டு இலங்கையை அடைந்து அவ்விடமே தொண்டுகள் செய்துகொண்டிருந்தார்.

1939, 40, 41-ஆம் ஆண்டுகளில் இமயமலையில் உள்ள மாயாவதி என்னும் இடத்தில் தங்கியிருந்து இராமகிருட்டிணமடத்தின் பத்திரிகையாகிய 'பிரபுத்த பாரத' என்னும் ஆங்கிலவெளியீட்டை நடத்தினர். பிறகு 1943-இல் இலங்கைப் பல்கலைக்கழகத்தில் தமிழ்ப் பேராசிரியராக அமர்ந்து இறுதிவரையில் பணிபுரிந்தார்.

திருக்கைலாய யாத்திரை

1937-ஆம் ஆண்டில் அடிகள் இமயமலையைத் தாண்டித் திபேத்துக்குப் போய்த் திருக்கைலைமலையைக் கண்டு வழிபட்டு வந்ததுமன்றி அந்நாட்டின் பல இடங்களினுமிருந்த பௌத்தப்பள்ளிகளையும் பார்த்தார். தமது திருக்கைலாய யாத்திரையைக் குறித்து இந்தியாவிலும், ஈழத்திலும் சொற்பொழிவுகள் பல செய்து இமயத்தின் சிறப்பையும் கயிலைவரைப் பெருமையையும் பலரும் உணர்ந்து கொள்ளுமாறு செய்தார்.

அறிஞர்கள் தொடர்பு

அறிஞர்களோடு கூட்டுறவு கொள்வதில் அடிகள் தனிச்சிறப்புடையவர்களாக விளங்கினர். தாம் துறவுக் கோலம் பூண்டவராயிருந்தும் கீழ்வீழ்ந்து தம்மை யாரும் வணங்குவதற்கு இணங்குவதில்லை. பெரியோர் சிறியோர் என்னும் வேறுபாடில்லாமல் எல்லோரையும் ஒரேபடியாக மதித்துப் பழகும் பண்பு அடிகளார்க்குத் தனிச்சிறப்பாக

விளங்கியது. சுன்னுகம் குமாரசாமிப்புலவர், வட்டுக் கோட்டை அம்பலவாணநாவல பராசக்தி சுவாமிகள், டாக்டர் உ. வே. சாமிநாதையர், வெள்ளக்கால் ப. சுப்பிர மணிய முதலியார், ரா. இராகவ ஐயங்கார், பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியார், நாவலர் சோமசுந்தர பாரதி யார், தமிழவேள், த. வே. உமாமகேசுவரம்பிள்ளை, ராதா கிருஷ்ணன், சோழவந்தானூர்க் கந்தசாமியார் முதலிய அறிஞர்களிடம் நெருங்கிப்பழகிய அடிகள் இவர்களிடம் தனிப்பற்று வைத்திருந்தார்.

நூல்கள்

அடிகளார் மயில்வாகனன் என்னும் பெயருடன் இளை ஞரா யிருந்தபோதே கட்டுரைகள் எழுதும் பணியில் இறங்கினர். நூல்கள் எழுதுவதற்குக் கட்டுரைகள் தாம் முதற்படி. வங்கநாட்டுக்கவி ரவீந்திரநாத தாகூர் ஆங்கிலத்தில் இயற்றிய "கார்டனர்" என்னும் பாக்களைப் "பூஞ்சோலைக் காவலன்" என்னும் பெயருடன் தமிழில் மொழிபெயர்த்துச் செந்தமிழ்ப்பத்திரிகையில் வெளி யிட்டார். மேற்றிசைச் செல்வம், விஞ்ஞான தீபம், பொரு ளூற் சிறப்பு, சூரிய சந்திரோற்பத்தி, மலைகடல் உற்பத்தி என்னுங் கட்டுரைகளும் செந்தமிழில் வெளிவந்தன. இமயஞ் சேர்ந்த காக்கை, உள்ளங்கவர் கள்வன், நீரர மகளிர் இன்னிசைப்பாடல், பண்ணுந் திறனும், லகர வெழுத்து, உணவு, குழலும் யாழும், கண்ணகியார் வழக்குரை, எண்ணும் இசையும், பாலைத்திரிபு, சுருதிவீணை, இயலிசை நாடகம், கங்கையில் எழுதியிட்ட ஓலை முதலிய கட்டுரைகள் கரந்தைத் தமிழ்ப்பொழிலில் வெளிவந்தன. செந்தமிழில் வெளிவந்த மதங்க சூளாமணி நூல்வடிவாக வெளிவந்துலவுகிறது. வேறு சில கட்டுரைகளும் நூல் வடிவாக வெளிவந்திருப்பதாகத் தெரிகிறது. அடிகளார்

ஏறக்குறையப் பதினாறுண்டுகள் முயற்சிசெய்து எழுதி முடித்த "யாழ் நூல்" என்னும் இசைத்தமிழ் நூல் 5-6-1947-இல் தஞ்சைமாவட்டத்தில் உள்ள திருக்கோள ளம்புதூரில் அரங்கேற்றஞ் செய்து வெளியிடப்பட்டது.

இறுதி

யாழ் நூல் அரங்கேற்றமானவுடன் ஈழநாடடைந்து தமது பல்கலைக்கழகவேலையை மேற்கொண்ட அடிகள், தமது ஐம்பத்தைந்தாவது அகவையிலே 1947-ஆம்ஆண்டு ஜுலைத்திங்கள் 19-ஆம் நாள் வீடுபேற்றினையடைந்தார்.

---

## கஅ. மறைமலையடிகள்

பிறப்பு

புனனாடெனப் புகழ்பெற்ற பொன்னிவள நன்னாட்டிலே, தஞ்சைமாவட்டத்தில் உள்ள நாகையை அடுத்த சிற்றூர் ஒன்றிலே, மறைமலையடிகள் பிறந்தார். அடிகளாரின் தந்தையார்பெயர் சொக்கநாதபிள்ளை. தாயார் பெயர் சின்னம்மையார். இவர்களுடைய குலம் சோழியச் சைவவேளாளர் குலம். சொக்கநாத பிள்ளைக்கு மக்கட் பேறு நெடுங்காலம் உண்டாகவில்லை. கணவனும் மனைவியும் கழுக்குன்றை யடைந்து கழுகுதொழு வேதகிரிக் கண்ணுதலைத் தொழுது வழிபட்டனர். சின்னம்மையார் நோன்புகள் பலவற்றை மேற்கொண்டார். கண்ணுதற் கடவுள் திருவருளால் ஆண்குழந்தை ஒன்று தோன்றியது. கழுக்குன்றுக்கு, வேதகிரி (வேதாசலம்) என்றும் பெயருண்டு. கழுக்குன்றக் கடவுள் திருவருளால் தோன்றிய மகவுக்கு வேதாசலம் என்று பெயரிட்டு மகிழ்ந்தனர். பின்பு அடிகள் தனித்தமிழ்ப்பற்றுக் கொண்டபின் இப்

பெயரை மறைமலை என்று தமிழாக்கிக் கொண்டார். அடிகள் என்பது துறவுக்கோலம் பூண்டபின் உண்டாகிய சிறப்புப்பெயர்.

கல்வி

அடிகள் குழவிப்பருவமாக இருந்தபோதே தந்தையார் சொக்கநாதபிள்ளை காலமானார். "தந்தையொடு கல்விபோம்" என்னும் பெரியோர் மொழியை அடிகள் பொய்யாக்கி விட்டார். ஐயாண்டளவில் மையேடு கைப்பிடித்த அடிகளார், பள்ளிப்படிப்பு முடிந்த பின்னரும் குன்றா ஊக்கத்துடன் கல்வியைக் கற்கலானார்.

அந்நாளில் நாராயணசாமிப்பிள்ளை என்பவர் நற்றமிழ் அறிஞர் என்று நாகையில் புகழ்பெற்றிருந்தார். அந்த நாராயணசாமிப்பிள்ளை மனோன்மணீயம் சுந்தரம் பிள்ளைக்கும் கல்விகற்பித்த சிறப்புடையவர். அவர் நாகையில் புத்தகக்கடை வைத்திருந்தார். அவருடைய கடையில் அந்நாளில் வெளியாகியிருந்த எல்லாத் தமிழ் நூல்களும் விற்பனைக்கு வாங்கி வைக்கப்பட்டிருந்தன. மாணவர்கள் தமக்கு வேண்டிய நூல்களை அவரிடம் விலைக்கு வாங்குவதுடன் பாடங்கேட்கத் தக்க நூல்களைப் பாடமுங் கேட்பார்கள். நாராயணசாமிப் பிள்ளை பெரும் புலவர் ஒருவரிடம் தொல்காப்பியம் முதலிய இலக்கண நூல்களையும் சங்கநூல்களையும் பாடங்கேட்டவர். மதிநுட்பமுஞ் சொல்லாற்றலும் நன்கு அமையப்பெற்றவர்.

மறைமலையடிகள் நாராயணசாமிப்பிள்ளையின் பெருமையை உணர்ந்தார். பிள்ளையவர்களிடஞ் சென்று, "தமக்குக் கல்விகற்பித்து முன்னுக்குக் கொண்டு வர வேண்டும்," என்று கூறிக் கீழேவிழுந்து வணங்கினார். நாராயணசாமிப் பிள்ளையவர்கள் மறைமலையின் வரலாற்றை

உசாவினர். தமிழ்க்கல்வியில் அவர் கொண்டிருக்கும் பற்றைக்கண்டு பெருவியப்புக்கொண்டார். தம்முடைய மாணவர்களுள் ஒருவராகச் சேர்த்துக்கொண்டு கல்வி கற்பிக்கத் தொடங்கினர். மற்றைய மாணவர்களைப்போல் படித்தோம் என்னும் பெயருக்கில்லாமல் அடிகள் பிள்ளையவர்களிடங் கருத்தாகக் கல்வியைக் கற்றார். பெரும்பாலும் பிள்ளையவர்களுடனேயே தங்கியிருந்து அவருக்காக வேண்டிய வேலைகளையும் செய்வார். அடிகளாரின் மெய்யன்பு நாராயணசாமிப் பிள்ளையவர்கட்கு மிகுந்த உவகையை அளித்தது. அவர் பெரும்பற்றுக்கொண்டு தாம் கற்றறிந்த நூல்களை யெல்லாம் அடிகளார்க்குக் கற்பித்தார். மறைமலையும் ஆசிரியரைப் போலக் கலைமலையாக மாறிவிட்டார். பிள்ளையவர்களிடம் மறைமலை பாடங்கேட்டுக்கொண்டிருக்கும்போதே தாம் வேறு சில மாணவர்கட்குப் போதிக்குந் தொழிலை மேற்கொண்டார். இதனல் மறைமலையின் அறிவு மேன்மேலும் வளர்ந்து சிறப்புறுவதாயிற்று. அடிகள் தமிழ்நூல்களைக் கற்றதோடு நின்றுவிடவில்லை. ஆங்கில நூல்களினும் பலவற்றைப் படித்துவந்தார். நாளடைவில் ஆங்கிலப்புலமையும் நன்கு அமைவதாயிற்று.

மணமும் மக்கட்பேறும்

மறைமலையின் பதினேழாம் அகவையில் அவருக்குத் திருமணம் நடைபெற்றது. மணமகளின் பெயர் சவுந்தரவல்லி. சவுந்தரவல்லி அம்மையார் அடிகளார்க்கு ஏற்ற வாழ்க்கைத் துணைவியாக அமைந்தார். மறு ஆண்டில் அடிகளார்க்குப் பெண்மகவு ஒன்று தோன்றியது. அப்போது அடிகளார் சிந்தாமணியைப் படித்துக் கொண்டிருந்தார். அக் குழந்தைக்குச் சிந்தாமணி என்றே பெயரிட்டார்.

மறுப்புக் கட்டுரைகள்

அந்நாளில் சோமசுந்தர நாயகர் என்பவர் புகழ் பெற்ற சைவசித்தாந்தியாகச் சென்னையிற் சிறந்து விளங்கினர். அவர் சொல்லாற்றலிற் சிறந்தவர். கேட்பார் உள்ளத்தில் பசுமரத்தாணிபோல் பதியுமாறு செய்திகளை அழுத்தந் திருத்தமாகக் கூறக்கூடியவர். அவர் நாகையில் இருந்த சைவசித்தாந்தப் பேரவை ஒன்றுக்குச் சொற்பொழிவுசெய்ய வந்தார். பல சொற்பொழிவுகள் செய்தார். மறைமலை அந்தச் சொற்பொழிவுகள் எல்லாவற்றையும் கருத்துடன் கேட்டார். நாயகரின் தமிழன்பினையும் சமயப்பற்றையுங் கண்டு மகிழ்ச்சிகொண்டார். அவரிடமே சைவசித்தாந்த நூல்களைக் கற்றுணர்வது என்றும் உள்ளத்தில் உறுதிசெய்துகொண்டார்.

அப்போது நாகையில் இருந்த வேதாந்தி ஒருவர் சோமசுந்தர நாயகரின் கொள்கைகள் சிலவற்றை மறுத்து ஒரு பத்திரிகையில் எழுதினர். மறைமலை, நாயகர் கருத்தையும் கட்டுரையாளர் கருத்தையும் ஒப்பிட்டுப் பார்த்தார். நாயகர் கருத்துச் சிறந்ததென்று முடிவுசெய்தார். 'முருகவேள்' என்னும் புனைபெயருடன் நாயகர் கருத்துக்கள் உயரியவை என்பதைப் பத்திரிகைக் கட்டுரை மூலம் தொடர்ந்து எழுதினர். இக்கட்டுரைத் தொடர்ச்சிகளைச் சென்னையில் இருந்த நாயகர் படித்தார். கட்டுரைகள் யாவும் நேர்மையான முறையில் வெளிவருதலைப் பாராட்டினர். "அவைகளை எழுதும் 'முருகவேள்' யாவர்?" என்று நாகைச் சைவசித்தாந்த சபையாருக்குக் கடிதம் எழுதிக் கேட்டார். அச் சபையினர் மறைமலையின் வரலாற்றை எழுதியனுப்பினர்கள். திங்கள் பல சென்றன. நாயகர் நாகைக்கு வந்தார். மறைமலையைக் கண்டு மகிழ்ச்சியுடன் பாராட்டினர். "சென்னையில் இருந்தால் சைவ

சித்தாந்த வளர்ச்சிக்கு நல்ல பணிபுரியலாம்,'' என்று கூறினார். மறைமலை சென்னைக்கு வருவதாக ஒப்புக்கொண்டார்.

சுந்தரம்பிள்ளையோடு தொடர்பு

திருவனந்தபுரம் அரசர் கல்லூரிப் பேராசிரியராக இருந்த சுந்தரம்பிள்ளை 'மனோன்மணீயம்' என்னும் நாடக நூலை எழுதி வெளியிட்டார். அந் நூல் நாகை நாராயணசாமிப் பிள்ளைக்கும் வந்தது. மறைமலை அந் நூலைப் படித்தார். அதனைப் பாராட்டிப் பிள்ளையவர்கட்கு எழுதினார். அதுமுதல் இருவருக்குந் தொடர்புண்டாயிற்று. சுந்தரம் பிள்ளை மறைமலையையும் தம் ஆசிரியர் நாராயணசாமிப் பிள்ளையையும் திருவனந்தபுரத்திற்கு அழைத்தார். இருவரும் திருவனந்தபுரஞ் சென்று சுந்தரம்பிள்ளையின் விருந்தினராகச் சிலகாலந் தங்கியிருந்து மீண்டனர்.

மறைமலையின் அறிவாற்றலை நன்குணர்ந்த சுந்தரம் பிள்ளை இவரைத் தகுதியான வேலையில் அமர்த்தவேண்டும் என்று விரும்பினார். ஆங்கிலப் பள்ளியொன்றில் தமிழாசிரியராக வேலை பார்ப்பதற்கு ஏற்பாடு செய்தார். அடிகள் அவ் வேலையை ஏற்றுச் சின்னாள் பார்த்தார். அந் நகரத்தின் தட்ப வெப்பம் அடிகளாரின் உடல்நலத்திற்கு ஏற்றதாக இல்லை. ஆகவே, அவ் வேலையை விட்டுவிட்டு நாகைக்குத் திரும்பினார். திருவனந்தபுரத்தில் இருந்தது இரண்டு மூன்று திங்களே யாயினும் அங்கு அரிய வேலைகள் பல செய்தார்.

சென்னையை அடைதல்

அடிகள் முதலிற் சென்னைக்குச்சென்று ஐந்தாறு திங்கள் ஒரு பத்திரிகையின் ஆசிரியராக இருந்தார். பிறகு, அவ்வேலையை விட்டுவிட்டு நாகைக்கு மீண்டார். அப்

போது சென்னைக் கிறித்தவக் கல்லூரியில் பரிதிமாற் கலை ஞர் (வி. கோ. சூரியநாராயண சாத்திரியார்) பேராசிரிய ராக இருந்தார். அவர் நல்ல செந்தமிழ் அறிஞர். தமிழ் வரலாறு, ரூபாவதி, கலாவதி முதலிய நூல்களை எழுதிய வர். பரிதிமாற் கலைஞருக்குத் துணையாக மற்றுமொரு தமி ழாசிரியர் அக் கல்லூரிக்குத் தேவைப்பட்டார். அப் பதவி யைப் பலபேர் நாடினர். கல்லூரித் தலைவர் தக்கவரைத் தேர்ந்தெடுக்குமாறு பரிதிமாற் கலைஞரைக் கேட்டுக் கொண்டார். பரிதிமாற்கலைஞர் பலரை ஆராய்ந்து அடி களாரைத் தேர்ந்தெடுத்தார். பரிதிமாற் கலைஞருக்கும் மறைமலைக்கும் நட்பு மிகுதிப்பட்டது. அடிகள் தனித் தமிழ் வேட்கையினராய்த் தம் பெயரையும் தமிழாக்கிக் கொண்டது பரிதிமாற் கலைஞருடைய கூட்டுறவினால்தான் என்பர். அடிகள் நன்முறையில் தமிழ்வகுப்பை நடத்தி மாணவர்களுடைய உள்ளங்களைக் கவர்ந்தார். அடிகளின் தமிழறிவும் சொற்றிறமும் யாண்டும் பரவத் தொடங்கின. சென்னையை அடைந்தபின் அடிகள் மேலும் பல நூல்களை நன்கு ஆராய்ந்து தம் தமிழறிவையும் ஆங்கில அறிவையும் மிகுதியாகப் பெருக்கிக் கொண்டார்.

செய்யுள் நூல் செய்தல்

அடிகள் சென்னையில் அரண்மனைக்காரன் தெருவில் குடியிருந்தார். அப்போது அடிகளார்க்கு வயிற்றுவலி உண்டாகியது. அடிகள் முருகப்பெருமான் மீது 'மும்மணிக் கோவை' என்னும் நூல் ஒன்றைப் பாடி அவ் வயிற்றுவலி யைப் போக்கிக்கொண்டார்.

மாணவர்கள்

பரிதிமாற் கலைஞர் 1903-ஆம் ஆண்டில் காலமானார். அவர் காலமானது அடிகளார்க்கு மிகுந்த மன வருத்

தத்தை உண்டாக்கியது. மிகுந்த வெறுப்புடனே வேலையைப் பார்த்து வந்தார். வேலையோடு வேலையாய் முல்லைப் பாட்டு ஆராய்ச்சி, பட்டினப்பாலை ஆராய்ச்சி முதலிய நூல்களை எழுதி வெளியிட்டார். அடிகளாரிடம் கல்லூரியிற் பயின்ற மாணவர்கள் போக இல்லத்திலும் பல மாணவர்கள் கல்விகற்றனர். ச. சோமசுந்தர பாரதியார், எஸ். வையாபுரி பிள்ளை, டி. கே. சிதம்பரநாத முதலியார், சி. என். முத்துரங்க முதலியார், இளவழகனார், நாகை தண்டபாணிப்பிள்ளை முதலியோர் அடிகளின் மாணவர்களிற் சிறந்தவர்களாவர்.

மக்கட்பேறு

அடிகளார்க்கு ஆண்மக்கள் நால்வரும் பெண்மக்கள் மூவரும் தோன்றினர். ஆண்மக்கள் பெயர்கள் திருஞான சம்பந்தர், மாணிக்கவாசகர், திருநாவுக்கரசர், சுந்தரமூர்த்தி என்பன. அடிகள் தம் மக்கட்கு இவ்வாறு பெயரிட்டமை கொண்டே அவர் சமயாசாரியர்களிடத்தில் எத்தகைய பற்றுக் கொண்டிருந்தார் என்பதை நாம் ஒருவாறு ஊகித்துக் கொள்ளலாம்.

அடிகள்

அடிகள் மனம் இல்லறத்தைத் துறந்து துறவறத்தை மேற்கொள்ள நாடியது. காவியுடையணிந்து பழுத்த துறவியாக விளங்கினார் இதன் பிறகே அடிகளென்பது பெரு வழக்காகியது. சென்னைநகர வாழ்க்கை அடிகட்கு வெறுப்பைத் தந்தது. நண்பர்களைக் கலந்தெண்ணினார். சென்னையை ஒட்டியுள்ள பல்லாவரம் என்னும் பல்லவபுரத்தை வசிப்பதற்குத் தக்க இடமாகத் தேர்ந்தெடுத்தார். ஆங்கு அழகிய மாளிகை ஒன்றை அமைத்துக்கொண்டு அதில் தங்கினார்.

நூல்கள் எழுதுதல்

அடிகள் பல்லாவரத்தை அடைந்த பின்பு தமது முழு நேரத்தையும் நூலாராய்ச்சியினும் நூல்கள் எழுதுவதினுஞ் செலவிடத் தொடங்கினர். எழுதிய நூல்களைப் பிறரிடம் அளிக்காமல் சிறிய பதிப்பகம் ஒன்றை ஏற்படுத்தி அதில் தாமே பதிப்பித்து வெளியிட்டார். அடிகளின் நூல்களில் பெரும்பாலானவை பேராராய்ச்சி செய்து எழுதப் பெற்றவை. மாணிக்கவாசகர் வரலாறுங் காலஆராய்ச்சியும், மக்கள் நூறாண்டு உயிர்வாழ்தல் எப்படி? என்னும் நூல் இரண்டும் மிகச் சிறப்புடையன. இந் நூல்களைப் படிப்போர் அடிகளாரின் பரந்த பேரறிவையும் நுண்ணிய ஆராய்ச்சித் திறமையையும் ஒருவாறு உணர்ந்து கொள்ளலாம். அடிகளால்,

1. மாணிக்கவாசகர் வரலாறும் கால ஆராய்ச்சியும்
2. மக்கள் நூறாண்டு உயிர்வாழ்தல் எப்படி ?
3. சைவசித்தாந்த ஞானபோதம்
4. முருகர் மும்மணிக்கோவை
5. சிறுவர்க்கான செந்தமிழ்
6. தமிழர் மதம்
7. தொலைவில் உணர்தல்
8. குமுதவல்லி
9. கோகிலாம்பாள் கடிதங்கள்
10. சாகுந்தல நாடக ஆராய்ச்சி
11. யோக நித்திரை
12. சிவஞானபோத ஆராய்ச்சி
13. திருக்குறள் ஆராய்ச்சி
14. பட்டினப்பாலை ஆராய்ச்சி
15. முல்லைப்பாட்டு ஆராய்ச்சி
16. பழந்தமிழ்க் கொள்கையே சைவசமயம்
17. கடவுள்நிலைக்கு மாறான கொள்கைகள்
18. சிந்தனைக் கட்டுரைகள்

19. முற்கால பிற்காலத் தமிழ்ப்புலவர்
20. சாதி வேற்றுமையும் போலிச் சைவரும்
21. சிறு தெய்வங்கட்கு உயிர்ப்பலி யிடலாமா?
22. திருக்கோயில் வழிபாடு
23. தமிழ்த்தாய்
24. சைவசமயப் பாதுகாப்பு
25. வேளாளர் நாகரிகம்
26. பொருந்தும் உணவும் பொருந்தா உணவும்
27. சோமசுந்தரக் காஞ்சியாக்கம்
28. அம்பலவாணர் திருக்கூத்து
29. தமிழ்நாட்டவரும் மேல்நாட்டவரும்
30. சைவசமயத்தின் நெருக்கடியான நிலை
31. தென்புலத்தார் யார்?
32. கடவுளுக்கு அருளுருவம் உண்டு
33. இந்தி பொதுமொழியா?
34. சிந்திருத்தக் குறிப்புகள்
35. அறிவுரைக் கொத்து

முதலிய பல நூல்கள் தூயதமிழில் எழுதப்பெற்று நல்லமுறையில் பதிப்பிக்கப்பெற்று வெளியாகியுள்ளன.

## இறுதி

"மக்கள் நூறாண்டு உயிர் வாழ்தல் எப்படி" என்னும் நூலை எழுதியதோடு அவ்வகையே தாமும் நடந்து நின்ற அடிகள் தமது எழுபத்தைந்தாவது அகவையிலே 1950-ஆம் ஆண்டு செப்டம்பர்த்திங்கள் 15-ஆம் நாள் இறைவன் திருவடிநிழலை எய்தினர். அடிகளின் பிரிவு தமிழ் உலகத்திற்கு ஈடு செய்தற்கரிய பேரிழப்பாக முடிந்தது. அறிஞர் பலரும் இரங்கற்பாக்கள் பாடித் தமது ஆற்றாமையைப் புலப்படுத்தினர்.

## உ0. செய்குத்தம்பிப் பாவலர்

சதாவதானி செய்குத்தம்பிப் பாவலர் என்பவர் நாஞ்சில் நாட்டிலே நாகர்கோவிலையடுத்த இலங்கடை யென்னும் சிற்றூரிலே பிறந்தார். பாவலரின் சமயம் மகமதிய சமயம். பாவலரின் தந்தையார் பெயர் பக்கீர் மீரான்சாகிப் என்பது.

பாவலர் இளமைப்பருவத்தில் மிக விரைவாகப் பள்ளிக் கல்வியைப் பயின்று முடித்தார். பிறகு தமிழ்ப்புலவராக விளங்குமாறு தமிழ்க்கல்வியை நன்கு கற்க எண்ணினர். அவ்வூரில் சங்கர நாராயணப் புலவர் என்பவர் ஒருவர் சிறந்த கல்வியறிவுடையவராக விளங்கியிருந்தார். அவரிடம் மாணவர் பலர் கல்விகற்றனர். பாவலரும் அந்தப் புலவரிடம் கல்விகற்க எண்ணினர். பாவலர் மிக வறிய குடும்பத்திலே பிறந்தவராதலின் ஏழ்மைநிலையிலே துன்புற்றார்.

செய்குத்தம்பிப் பாவலரும் வேறு சிலரும் சங்கர நாராயணப் புலவரிடத்திலே கற்றலை விரும்பிச் சென்றனர். பாவலர் புலவரிடம் கருத்துடனும் ஒழுங்காகவும் படித்துக் கல்வியில் தேர்ச்சி பெற்றவரானர்.

அகவை பதினைந்து நிரம்புதற்கு முன்னரே செய்குத் தம்பிக்குக் கல்வியறிவு நிரம்பிவிட்டது. அவர் தம் பதினருமாண்டில் அழகிய செய்யுட்களை இயற்றலானர். அந்தாதி பிள்ளைத்தமிழ் முதலிய நூல்களைத் தம் மதக்கடவுள்மீது பாடினர். ஒருவர் பதினரும் ஆண்டில் தானே நூல்கள் இயற்றத் தொடங்கிவிட்டார் என்றால், அது வியக்கத்தக்க செயலன்றோ? அந் நாளிலேயே அவருக்குப் "பாவலர்" என்னும் பெயர் உண்டாகி விட்டது. பாவலர்க்குச் சொல்லாற்றலும் நன்கு அமைந்திருந்தது. அவையினர் மகிழும்

வண்ணம் கடல்மடை திறந்தாற்போல் சடசடவென்று பேசுவார். அவருடைய சொற்பொழிவைக் கேட்கத் தொடங்கியவர்கள் இடையிலே எழுந்து செல்லமாட்டார்கள்.

தம் சமயப் பெரியார் ஒருவர் இயற்றிய நூல் ஒன்றை அச்சிடுவதற்காகப் பாவலர் தமது பத்தொன்பதாம் ஆண்டிலே சென்னைக்குச் சென்றார். அங்குச் சில காலம் தங்கித் தாம் அச்சிடவந்த நூலை அச்சிட்டு முடித்தார். அப்பொழுது அங்கு இட்டா பார்த்தசாரதி நாயுடு என்பவர் பாவலருக்குப் பழக்கமானார். பாவலர் பார்த்தசாரதி நாயுடுவின் பதிப்பகத்திலே தங்கி நூல்களைப் பிழையற ஆராய்ந்து வெளியிடும்பணியில் இறங்கினார். எண்ணற்ற நூல்கள் பிழையின்றி வெளிவந்தன. நபி நாயகத்தின் வரலாறுகூறும் சீறாப்புராணத்தையும் பிழையறப் பதிப்பித்து வெளியிட்டார். அந் நூலுக்குத் தக்க உரையும் பாவலரால் எழுதப்பட்டது.

இராமலிங்கஅடிகளின் திருவருட்பாப் பாடல்களுக்கு அப் பெயர் பொருந்தாது என்றும், இராமலிங்க அடிகளின் பாடல்கள் மருட்பாக்கள் என்றும் சிலர் கூறி வம்பிழுத்துத் திரிந்தனர். பாவலர் தாம் வேறொரு சமயத்தவர் என்பதையும் மறந்து, அந் நூற்போரிலே இறங்கி இராமலிங்க அடிகளின் பாடல்களை அருட்பா என்றல் எவ்வாற்றானும் பொருந்துமென்று பல சொற்பொழிவுகள் செய்தார். இதனால் அருட்பாக் கட்சியினருக்கு நன்மைகள் பல உண்டாயின.

பாவலர் அவதானம் செய்வதற்கும் பழகியிருந்தார். ௧௮௦௭-ஆம் ஆண்டிலே சென்னை விக்டோரியா மண்டபத்தில் கண்ணபிரான்முதலியார் என்பவருடைய தலைமை

நிலே மிகக் கடினமான சதாவதானம் நடைபெற்றது. பாவலர் அந்தச் சதாவதானத்தைத் திறமையுடன் செய்து பலருடைய பாராட்டுதலையும், வெகுமதிகளையும் பெற்றார். அப்பொழுது ஈற்றடி கொடுத்துச் செய்யுள் இயற்றுதலும் நடைபெற்றது.

"விராடனையே பெண்ணெனலா மே"
"மாமனுக்குக் கந்தன் மகன்"

என்னும் ஈற்றடிகளுக்கு,

"உண்ணும் பொழுதும் உறங்கும் பொழுது மொன்றை
எண்ணும் பொழுதும் எரிமுன்னாய்—மண்ணில்
வராடவனையே தெய்வம் மன்னனெனும் சொற்ற
விராடனையே பெண்ணெனலா மே.

அண்டர் முறையால் அலைகடலில் பள்ளி கொண்ட
கொண்டல் வண்ண மேனிக் குரிசிலாம்—விண்டுபெற்ற
காமனுக்கு முற்றும் கருதும் படியமைந்த
மாமனுக்குக் கந்தன் மகன்."

என்னுஞ் செய்யுட்கள் அப்போது பாவலரால் இயற்றப்பட்டன. அது முதல் பாவலருக்குச் சதாவதானி என்னுஞ் சிறப்புச் சொல்லும் பெயருக்குமுன் அமைந்தது.

பாவலர் ௧௯0௭-ஆம் ஆண்டில் தாம் பிறந்த ஊருக்குச் சென்றார். அப்போது அவருக்குத் திருமணம் நடைபெற்றது. பின்னர் இரண்டு ஆண்டுகள் மட்டுஞ் சென்னையில் தங்கிய பாவலர் அதன் பிறகு ஊரையடைந்தார். ஊரினர் யாவரும் அவரை ஊரில் தங்கிவிடுமாறு வற்புறுத்தினர். நூல்கடை ஒன்றும் வைத்துக்கொடுத்தனர். பாவலர் பலருக்கும் பாடஞ்சொல்லுந் தொழிலை மேற்கொண்டு பல புலவர்களை உண்டாக்கினார். ஷம்சுத்தாசின் கோவை, கல்வத்து நாயகம் அவர்கள் இன்னிசைப் பாமாலை, திருநாகூர்த் திருவந்தாதி, திருக்கோட்டாற்றுப் பதிற்றுப்பத்

தந்தாதி முதலிய நூல்கள் பாவலரால் இயற்றப்பெற்றன. தமிழ் பேசும் முஸ்லீம்கள் பாவலரின் சிறப்பால் பெருமிதத்தையும் பல நன்மைகளையும் அடைந்தனர். பாவலர் எழுபத்தெட்டு ஆண்டுகள் வரை உயிர் வாழ்ந்திருந்து ௧௯௫௦-ஆம் ஆண்டில் காலமானார்.

## உக. தி. பொ. பழநியப்பபிள்ளை

தோற்றம்

தி. பொ. பழநியப்ப பிள்ளை 1893-ஆம் ஆண்டு ஆகஸ்டுத் திங்கள் இருபத்தொன்பதாம் நாள், பொன்னுச்சாமிப்பிள்ளை என்பவருக்கு மைந்தனாகப் பழநியம்பதியிலே பிறந்தார். பழநியப்ப பிள்ளையின் தாயார் பெயர் அரங்கம்மாள். பொன்னுச்சாமிப் பிள்ளை பழநியில் ரெவினியூ இலாகாவில் கணக்கராகத் தொண்டுபுரிந்துகொண்டிருந்தார்.

கல்வி

பழநியப்பர் முதற்கண் தொடக்கப்பள்ளியில் சேர்ந்து கல்விபயிலத் தொடங்கினர். பிறகு ஆறுமுகம்பிள்ளை என்னுந் தம் பாட்டனாரிடம் தமிழ்நூல்களைக் கற்கத் தொடங்கினர். கொன்னக்கோல் மருதநாயகம் பிள்ளை என்பவரிடம் இசைக்கலை யறிவுஞ் சிறிதுபெற்றார். திண்டுக்கல் நகராட்சி உயர்நிலைப்பள்ளியில் மூன்றும் பாரம் வரை பயின்றார். 1911-ஆம் ஆண்டில் இருந்து 1915-ஆம் ஆண்டு முடிவுவரை, திரிசிராப்பள்ளி நேஷனல் உயர்நிலைப்பள்ளியில் பள்ளியிறுதி வகுப்புவரை படித்தார். பின் தமிழ் இலக்கண இலக்கியங்களைப் பயின்று மதுரைத் தமிழ்ச்சங்கத் தேர்வில் தேறிப் பொற்பதக்கம் பெற்றார்.

ஆசிரியத்தொழில்

1916-ஆம் ஆண்டு முதல் திருச்சி நேஷனல் உயர்நிலைப் பள்ளியில் தமிழாசிரியராக வேலைபார்க்கத் தொடங்கினார். எஸ். பி. சி. கல்லூரியில் தொண்டுசெய்துகொண்டிருந்த பிச்சை இப்ராகிம் புலவரிடம் மேலும் தமிழ்க்கல்வியை நன்கு கற்றதுடன் தாமாகவும் பன்னூல்களை ஆராய்ச்சி செய்தார். நாளடைவில் பழநியப்பர் தமிழறிவுநிரம்பப் பெற்று நல்ல புலவரானார்.

மணமும் மக்கட்பேறும்

1917-ஆம் ஆண்டில் பழநியப்பருக்குத் திருமணம் நடைபெற்றது. மணமகள் பெயர் இராச மன்னாரம்மாள். எதிர்கால நிகழ்ச்சி யுரைப்போர் (சோதிடர்) ஒருவர் பழநியப்பர் இருமணம் பெறுவர் என்றெடுத்து இயம்பினார். ஆயினும், அஃது உண்மையாக முடியாமற் பொய்யாகப் போய்விட்டது. இராசமன்னார் அம்மாளிடம் இரண்டு ஆண்மக்களும் மூன்று பெண்மக்களும் தோன்றினர்.

சமயநூற் பயிற்சி

பழநியப்பர் சைவசமயக் கொள்கை ஒன்றினை அறிந்ததோடு அமைவு கொள்ளவில்லை. பல சமயக்கொள்கைகளையும் உணர்ந்துகொள்ள எண்ணினார். வைணவம், வேதாந்தம், பௌத்தம், கிறித்துவம், முகமதியம் ஆகிய சமயங்களின் நூல்களையும் ஆராய்ச்சி செய்து அவைகளின் தன்மையையும் உணர்ந்துகொண்டார். பல சமயஉணர்வின் பயனாகப் பழநியப்பரின் உள்ளத்தில் சமரசக் கொள்கை குடிகொண்டது.

கல்வியில் முன்னேற்றம்

அரசினரால் ஒப்புக்கொள்ளப்பட்ட பல்கலைக் கழகங்களில் பட்டம் பெறுதலைப் பழநியப்பர் நாடினார். 1932-ஆம்

ஆண்டில் சென்னைப் பல்கலைக்கழகப் புலவர்தேர்வில் முதல்வராகத் தேறித் திருப்பனந்தாள் காசி மடத்தாரின் வெண்பொற் காசுகள் ஆயிரத்தையும் பெற்றார். ஆங்கிலத்தில் பி. ஓ. எல். என்னும் பட்டத்தையும் பெற்றார்.

பல்கலைக்கழகத்தில் பணி

பழநியப்பர் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் 1932-ஆம் ஆண்டுமுதல் 1941-ஆம் ஆண்டுவரை பணிபுரிந்தார். அந்நாளில், சோமசுந்தரபாரதியார், பண்டிதமணி மு. கதிரேசன் செட்டியார், ரா. இராகவஐயங்கார், ந. மு. வேங்கடசாமி நாட்டார், சர்க்கரை இராமசாமிப் புலவர், சோழவந்தானூர்க் கந்தசாமியார் முதலியோர் பல்கலைக் கழகத்தில் பழநியப்பருடன் பணிபுரிந்தனர். பின்னர் 1941-ஆம் ஆண்டில் திருப்பதி திருவேங்கடவன் கீழ்க்கலை ஆராய்ச்சித்துறைத் தமிழ்த்தலைவராக அமர்ந்து பணியாற்றத் தொடங்கினார். அதுமுதல் பதிப்பாளராகவும் ஆராய்ச்சி அறிஞராகவும் விளங்கினார். திருவேங்கடத் தல புராணம், எம்பெருமானார் நெஞ்சுவிடுதூது, சேடமலைப் பதிற்றுப்பத்தந்தாதி, திருக்குறள காளிங்கர் பரிப்பெருமாள் உரை முதலியன பழநியப்பரின் பார்வையில் வெளி வந்தன.

மறுப்புரை

ஆராய்ச்சியில் தாம் கண்ட முடிபுகளை வெளிப்படுத்துவதற்குப் பழநியப்பர் சிறிதுந் தயங்கமாட்டார். ஆராய்ச்சி புலமையில் தலைசிறந்து நின்ற மறைமலையடிகள் பன்னெடுங் காலம் பேராராய்ச்சி செய்து மாணிக்கவாசகர் வரலாறுங் கால ஆராய்ச்சியும் என்னும் அரிய நூலை எழுதி முடித்து வெளிப்படுத்தினார். பழநியப்பர் மேற்படி நூலில் மாணிக்க வாசகர் காலம் தவறு என மறுத்துத் தம் முடிபை வெளி

பிட்டார். மற்றும் திரு. வையாபுரிபிள்ளை, இராகவ ஐயங்கார் முதலியோருடைய முடிபுகள் சிலவற்றையும் மறுத்தார்.

பண்பு

பழநியப்பர் சொல்நயமும் பொருள்நயமும் அமையப் பேசுவார். இவருடைய பேச்சில்இளமை நலம் இனிது சிறந்து விளங்கும். "எல்லார்க்கும் நன்றாம் பணிதல்" என்பது திருவள்ளுவர் திருவாக்கு. பழநியப்பர் பேரறிஞராக இருந்தும் பணிவுடைமையைப் பெரிதும் மேற்கொண்டிருந்தார். "பணிவுடையன் இன்சொல்ல னாதல்" ஆகியன பழநியப்பரிடம் இனிது அமைந்திருந்தன. இவர் இளமையிலேயே இசையறிவும் பெற்றிருந்தார். சித்திரகவி முதலிய வைகளைச் செய்வதினும் பழநியப்பர் வல்லவர். இவருடைய சித்திரகவிகள் உ. வே. சாமிநாதையருடைய பாராட்டுதலையும் பெற்றுள்ளன. கல்வெட்டறிவு முதலிய ஆராய்ச்சியறிவிலும் பழநியப்பர் தலைசிறந்து விளங்கினார்.

இறுதி

"நெருநல் உளனொருவன் இன்றில்லை என்னும்,
பெருமை உடைத்திவ் வுலகு"

என்றார் திருவள்ளுவர். உடல்நலத்துடன் இருந்த பழநியப்பர் அறிஞர்உலகம் திடுக்கிட்டுத் திகைக்குமாறு தமது ஐம்பத்தெட்டாவது அகவையில் 1951-ஆம் ஆண்டு பிப்ரவரித் திங்கள் முதல் நாள் திடீரென்று இவ்வுலக வாழ்வைத் துறந்து விண்ணாடு சென்றார். இவர்தம் பிரிவையறிந்து கலையுலகம் முற்றும் நிலைகுலைந்து வருந்தியது.

# ௨௨. சு. நல்லசிவன்பிள்ளை

## தோற்றம்

தென்பாண்டி நாட்டிலே திருநெல்வேலிக்கு அண்மையில் உள்ள சம்புலிங்கடரம் என்னுஞ் சிற்றூரிலே 1882-ஆம் ஆண்டு ஜூன் திங்கள் எட்டாம்நாள் நல்லசிவன் பிள்ளை பிறந்தார். தந்தையார்பெயர் சுப்பிரமணியபிள்ளை. தாயார் பெயர் சண்முகத்தம்மையார். குலம் சைவவேளாண் குலம். நல்லசிவன்பிள்ளைக்கு உடன்பிறப்பாளர் இருவர் தோன்றிக் குழவிப் பருவத்திலேயே காலமாயினர்.

## கல்வி

நல்லசிவன்பிள்ளையின் மாதுலர்களாகிய திருவண்ணநாதக் கவிராயர் திரவிய சங்கரநாராயணக் கவிராயர் என்பவர்கள் நல்ல புலவர்களாக விளங்கியிருந்தனர். அவர்கள் இருவரும் தம்மருகர் நல்லசிவனாருடைய கல்வியிற் கருத்துச் செலுத்தினர். போதிக்க வேண்டிய நூல்களையெல்லாம் முறைபடக் கற்பித்தனர். நாளடைவில் நல்லசிவனார் நல்ல கல்வியறிவு பொருந்தப்பெற்றார். நல்லொழுக்கம் பணிவுடைமை இன்னுரை முதலிய நற்பண்புகளும் நல்லசிவனாரிடத்தில் அமைந்தன.

## ஆசிரியத்தொழில்

நல்லசிவனார் தாம் பெற்ற கல்வியைப் பயன்படுத்தத் தக்க நிலையை அடைந்தனர் பதுமநாப மங்கலம் கூட்டுடன் காடு, தெய்வச்சிலையாபுரம் என்னும் ஊர்களில் தமிழாசிரியராகத் தொழில் புரிந்தார். 1907-ஆம் ஆண்டில் தம் மாதுலர் மகளைத் திருமணம்புரிந்தார்.

## தமிழ்ச்சங்கத்தில் பணி

நல்லசிவனாரின் கல்வியல்பும் அறிவுத்திறனும் மதுரைத் தமிழ்ச்சங்கத்தின் தலைவராக அந்நாளில் விளங்கிய

